# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அறியாமை |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதற்பதிப்பு | : | 15 ஆகஸ்ட் 2020 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 64 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | அனைவருக்கும் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| இதற்கான விலை | : | அக விழிப்பு |

# அறியாமை

படைக்கப்பட்ட ஒவ்வொரு உயிரும் அமைதியும், ஆனந்தமும் இன்றி அல்லல்படுவதற்கு அத்தியாவசியக் காரணம், அவைகள் தன்னைப் பற்றி அறிய முடியாமல் இருக்கின்ற அறியாமைதான் ஆகும்.

இங்கு **நான் யார்?** என்ற விசாரணையை மனிதன் தவிர மற்ற எந்த ஜீவராசிகளும் விசாரணை செய்து, தன்னைப் பற்றிய உண்மையை அறிந்துக் கொள்ள முடியாது.

காரணம், அவைகளுக்கு மனிதனுக்கு உள்ளதைப் போன்ற நன்மை, தீமைகளை பகுத்தறியும் ஆறாவது அறிவு கிடையாது.

அவைகள் அனைத்துமே தங்களுக்கு கிடைத்துள்ள ஐந்து அறிவுகளுக்கு உட்பட்டே தங்கள் வாழ்க்கையை வழி நடத்துகின்றன. அந்த புலன்களுக்கு கட்டுப்பட்டே வாழ்கின்றன. இறுதியில் அந்த புலன்களின் வாயிலாகவே இறக்கின்றன.

அதே ஐந்து அறிவுகளுடன் கூடிய ஐந்து புலன்களைக் கொண்ட மனிதன் தனக்கு கொடுக்கப்பட்ட கண், காது, மூக்கு, நாக்கு மற்றும் தோல் என இவைகளைக் கொண்டு பார்த்தல், கேட்டல், நுகர்தல், சுவைத்தல் மற்றும் உணர்தல் என்ற புறக்கரணங்களைக் கொண்டு விசயங்களை விபரமாக

அறிந்துக் கொள்வது மட்டுமின்றி, அதனால் உண்டாகின்ற நன்மை, தீமைகளை பகுத்தறியக் கூடியவனாக ஒரு சிறப்பினைக் கொண்டுள்ளான்.

அதுதான் அவனுக்கு கொடுக்கப்பட்ட **'புத்தி சக்தி'** என்ற ஆறாவது அறிவு எனப்படும் பகுத்தறிவு.

மற்ற ஜீவராசிகளுக்கு கிடைக்காத கூடுதலாக கொடுக்கப்பட்ட ஆறாவதாக உள்ள அந்தக்கரணமான மனம் என்ற ஒன்று இவனிடம் சிறப்பாக இருப்பதினால், இதனைக் கொண்டு இவன் *மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்* என்ற தன் புறப் புலன்களின் அறிவுக்கு மேலாக, அகத்தின் அறிவை அறிந்து, அதனைப் புரிந்துக் கொண்டு, தனக்கு உண்டாகும் நன்மை தீமைகளை பகுத்தறிந்து கொள்ள முடிகின்றது.

அதனால், தனக்கும், மற்ற உயிர்களுக்கும் உண்டாகும் நன்மை, தீமைகளுக்கு என்ன காரணம்?

யார் காரணம்?

என்று விசாரித்து அறிய முற்படும்பொழுதுதான், தனக்கு வேறாக இருக்கின்ற இவைகளின் சுக, துக்கங்களுக்கு காரணம் என்ன? என்பதை அவன் அறிய முடிகின்றது.

அத்தகைய சுக, துக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமான **நான் யார்?** என்று விசாரிக்கும் ஆர்வமும், ஆற்றலும் அவனுக்கு உண்டாகின்றது.

அத்தகைய ஆர்வமும், ஊக்கமும் கொண்ட மனதினைக் கொண்டதினால்தான் அவனை **'மனிதன்'** என்று அழைக்கப்படுகின்றது.

அதைவிடுத்து, மற்ற ஜீவர்களைப் போன்று, தங்களிடம் உள்ள ஐந்து புலன்களின் அறிவுகளைக் கொண்டு உண்பதும், உறங்குவதும், மலம், சிறுநீர் கழிப்பதும், ஆணும், பெண்ணும் என இணைந்து புணர்ச்சியில் ஈடுபடுவதும், அதன்பிறகு குட்டிகளைப் பெற்றுக் கொள்வதுமாக, இவைகளை மட்டும் மேற்கொண்டு வாழ்வதற்கு மனிதப் பிறவி வேண்டியதில்லை, அதற்கு மிருகப்பிறவியிலேயே இன்னும் கூட எந்தவித ஒழுக்கக் கட்டுப்பாடுகளும் இன்றி, சிறப்பாக சற்று கூடுதலான சுகங்களையும், துன்பங்களையும் அனுபவித்திட முடியும்.

மற்ற மிருகங்களைப் போன்றே மனிதனும் வாழ்ந்து, மரணத்தை அடைவதற்கு, அவன் ஏன் மனிதப் பிறவிக்கு வர வேண்டும் என்று என்றாவது யோசித்திருக்கின்றோமா?

இன்பத்தை அடைவதற்காகத்தான் இந்த புலன்கள் என்றால், இவைகளைக் கொண்டு எந்த உடலில் இருந்து வேண்டுமானாலும் இன்பத்தை அனுபவிக்க முடியுமே!

ஏன் மனிதர்களாகிய நமக்கு இல்லாத சிறப்பான புலன்களின் சக்திகள், நம்மை விட மிருகங்களுக்கு கூடுதல் சக்தியுடன் கொடுக்கப்பட்டுள்ளனவே.

உதாரணமாக, இரவில் நம்மால் காண முடியாத காட்சிகளை மிருகங்கள் எளிதாகக் காண்கின்றனவே. நம்மால்

கேட்க முடியாத சப்தங்களையெல்லாம் அவைகள் இன்னும் நுண்ணியதாக கிரகிக்கின்றனவே.

நம்முடைய புலன்களுக்குள் அடங்காத இன்னும் எத்தனையோ இன்பங்கள் இந்த உலகத்தில் இருக்கலாம் அல்லவா?

நம்மிடத்தில் அவைகளை அனுபவிப்பதற்கான புலன்கள் இல்லையே என்ற வருத்தம் வேறு வருகின்றதே.

பொதுவாக, நமக்கு கிடைத்த புலன்களைக் கொண்டு கண்டதே காட்சி, கேட்டதே விஷயங்கள், அறிந்தவைகளே அறிவு என இருந்து விட்டதினால் வந்த விளைவுகள் இதுப்போன்ற எண்ணங்கள் என்பதை நன்கு அறிந்துக் கொள்ள வேண்டும்.

மனிதர்களாகிய நம்மிடையே இருக்கின்ற சிறப்பிற்கும், சீரழிவிற்கும் காரணம் நம்முடை மனதை நாம் பயிற்றுவித்துக் கொண்டதின் விளைவாகத்தான், நம்முடைய ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றது என்பதை நாம் என்று அறிகின்றோமே, அன்றே நாம் மனிதர்களிலேயே மகத்தானவனாக மாறி விடுகின்றோம்.

இந்த பகுத்தறியும் சக்தியைத்தான் '**புத்தி சக்தி**' என்று நாம் கூறுகின்றோம். இந்த புத்தி கூர்மை உள்ளவர்களே மனித உடலிற்குள் வந்து மகத்தானவர்களாக மாறுகின்றார்கள்.

மற்றவர்கள் எல்லாமே, மனித உடலில் இருந்துக் கொண்டு, மிருகங்களின் புலன் அறிவுகளைப் போன்றே, அந்த ஐந்து புலன்களின் இன்பங்களிலேயே இருந்து, அதற்குண்டான

சுக, துக்கங்களை மட்டுமே அனுபவித்து விட்டு, இறுதியில் இறந்து விடுகின்றார்கள்.

ஆனால், இந்த புறக்கரணங்களால் அடைய முடியாத ஆனந்தம், நம் அகக்கரணங்களாக உள்ள *மனம், புத்தி, சித்தம் அஹங்காரம்* என்ற ஒரே அறிவு சக்தியாக நம்முள்ளே புதைந்துக் கிடப்பதை, எவர் அறிகின்றாரோ, அவரே மனிதர்களில் மகத்தானவர்களாகப் போற்றப்படுகின்றார்கள்.

அந்த பகுத்தறியும் புத்தி சக்தி தன்னிடம் இருந்தும் அதைப் பயன்படுத்தாமல், மனம் போன போக்கில் போய்க் கொண்டு இருப்பதினால், மனிதன் தன் மகத்துவத்தை இழந்து, இழிப்பிறவியான மற்ற உயிரினங்களைவிட கீழான வாழ்க்கை வாழ்ந்து, இறுதியில் எந்த இன்பத்தையும் முழுமையாக அனுபவிக்க முடியாமலேயே முடிந்து விடுகின்றான் என்பதை எத்தனைப் பேர் அனுபவமாக்கிக் கொண்டுள்ளனர் என்பதை எடுத்துக்காட்டாக கூறவும் வேண்டுமோ?

தன்நிலை அறிந்து, இந்த தரணியில் தலைவர்கள் ஆனவர்கள் அனைவருமே, தங்களுக்கு கொடுக்கப்பட்ட பிரத்யேகமான புத்தி சக்தியை முழுமையாகப் பயன் படுத்தி உள்ளனர். அவர்களையே மனிதர்களில் மாணிக்கம் என்றும், மஹான்கள் என்றும் நாம் அழைக்கின்றோம்.

இந்த அரிய உண்மையை அவசியம் அறிந்து வைத்துக் கொண்டவன் எவனோ, அவனே '**மனிதன்**' எனப்படுகின்றான்.

அதைவிடுத்து, அறிவை அறியாமல், மனம் போனபடி வாழ்கின்றவனை மனிதன் என்று ஒப்புக்கொள்ள முடியாது. அவனை மிருகத்துடன் மட்டுமே ஒப்பிட முடியும்.

அந்த வகையிலே மனிதர்களுக்கும், மற்ற உயிரினங் களுக்கும் உடல்கள்தான் வித்தியாசமே தவிர, மற்றபடி இந்த ஐந்து அறிவுகளுக்கு உட்பட்டே இவைகளும், இவர்களும் வாழ்கின்றன என்பதில் எந்தவிதமான ஐயமும் தேவையில்லை.

மனம் என்ற ஒன்று மனிதனிடம் இருப்பதினால்தான் அவனை மனிதன் என்றே அங்கீகரிக்கப்படுகின்றது. காரணம், அதனைக் கொண்டுதான் அவன் தனக்குத் தேவையான ஆனந்தத்தை, அதாவது, முழுமையான அமைதியை அவன் அடைந்திட முடியும்.

அமைதி உண்டாகாத எந்த உயிரினமும் தன் உண்மை இயல்பை அறிந்துக் கொள்ள முடியாது.

அந்த வகையிலே மனிதன் மட்டுமே தன்னிடம் உள்ள மனதைக் கொண்டு, நல்லது, கெட்டதை பகுத்தறிந்து, அதன் வாயிலாக மனதிற்கு அமைதியை உண்டாக்கி, உடலின் புலன்களின் வாயிலாக வெளிப்படுகின்ற உணர்ச்சிகளை ஒழுங்குபடுத்தி, அவைகளைச் சரியாகக் கையாண்டு, அவைகளைக் கடந்து, அகத்தின் உள்ளே உள்ள அந்த உள்ளுணர்வில் தன்னை ஒடுக்கிக் கொண்டவனே, முழுமையான ஆனந்தத்தை அனுபவித்திட முடியும்.

நமக்கு கிடைத்துள்ள மனதினைக் கொண்டு, நன்கு யோசித்துப் பாருங்கள்!

நாம் எப்படியெல்லாம் விசய சுகங்களை இந்த மனதிற்கு ஏற்றி வைத்துக் கொண்டு இருக்கின்றோம். இன்னும் ஏகப்பட்டதை ஏற்றிக் கொண்டு வருகின்றோம்.

இவ்வாறு ஏற்றி வைத்துக் கொண்டவைகளில் நாம் எங்கு, எதில் சிக்கிக் கொண்டு சின்னாபின்னமாகிக் கொண்டிருக்கின்றோம் என்பதை எண்ணங்களை ஆராயாமல், எவன் ஒருவனும் வாழ்வின் ஏற்றத்தை அடைய முடியாது.

ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களால், இது நல்லது, இது கெட்டது என்பதை பகுத்தறியும் அதே மனம் எதன் அடிப்படையில் நன்மை, தீமைகளை தீர்மானிக்கின்றது என்பதை இன்னும் சற்று ஆழமாக யோசித்துப் பார்க்க வேண்டும்.

நன்மை - தீமை, சுகம் - துக்கம் இவைகள் எதன் அடிப்படையில் திர்மானிக்கப்படுகின்றன?

ஒருவனுக்கு நன்மையாகப்படுவது மற்றொருவனுக்கு தீமையாக அல்லவா உள்ளது?

ஒருவனுக்கு தீமையாகப்படுவது, மற்றொருவனுக்கு நன்மையாக அல்லவா உள்ளது?

என்றாவது இதைப்பற்றி யோசித்திருக்கின்றோமா?

அப்படியானால், எதன் அடிப்படையில் நன்மை, தீமைகளை நாம் பிரித்தறிவது?

அது நமக்கு கிடைக்கின்ற சுக, துக்கங்களின் அடிப்படையில் என்று கூறுவீர்களேயானால், நமக்கு சுகத்தைக் கொடுக்கின்ற அதே சுகம், மற்றவர்களுக்கு துன்பத்தை அல்லவா கொடுத்து விடுகின்றது?

எனவே, இங்கு இன்ப, துன்பங்களின் அடிப்படையில் கூட நாம் நல்லது, கெட்டதைத் திர்மானிக்க முடியாது.

ஆகவே, நன்கு கொடுக்கப்பட்ட புத்தி சக்தியினைக் கொண்டு, மனதை விசாரித்துப் பாருங்கள்!

நம்மிடையே உள்ள குழப்பம் புரியும்.

உதாரணமாக, நமக்கு ஒரு விசயம் பிடித்திருக்கும்.

அது உணவுகள், உறவுகள், சமயம், மதம், மொழி, குரு, கடவுள் என எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும்.

நமக்கு பிடித்ததுப் போன்றே மற்றவர்களுக்கும் அதையே பிடித்திருக்க வேண்டும் என்று எதிர்ப் பார்க்கின்றோம்.

மேலும், அவைகளை நாம் அவர்களுக்கு கட்டாயமாகத் திணிக்கவும் விரும்புகின்றோம்.

இந்த சூழ் நிலைகளினால்தான் நாம் நம் மன அமைதியை முழுமையாக இழக்கின்றோம். பல்வேறு இன்னல்களுக்கும் ஆளாகி இடர்படுகின்றோம்.

நமக்கு பிடித்தவைகள் மற்றவர்களுக்கும் பிடித்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை அல்லவா?

பிறகு ஏன்?

அதை நாம் எதிர்ப்பார்க்கின்றோம்?

அவ்வளவுதூரம், நாம் அவைகள் மீது அபிமானம் (பற்று) வைத்திருக்கின்றோம்.

அதன் உண்மைத்தன்மையை அறியாமல், நமக்கு சரி என்பதினால், அவைகளை மற்றவர்கள் மீது ஏற்றி வைக்க முயற்சிக்கிறோம்.

நம்மிடம் ஏற்றிவைத்துக் கொண்ட அறிவைக் கொண்டு, நம்மைப் பொருத்தவரையில் இதுதான் சரி என்று நாமே முடிவு செய்துக் கொள்கின்றோம்.

இதுதான் நம்மிடம் உள்ள மிகப்பெரிய பிரச்சனை.

பிறகு எப்படித்தான் இந்த பிரச்சனைகளுக்குத் தீர்வு?

ஒன்றை மட்டும் நன்றாகப் புரிந்துக் கொள்ளுங்கள்.

நமக்குப் பிடித்ததை மற்றவர்களுக்கும் பிடிக்க வேண்டும் என்ற நம்முடைய எதிர்ப்பார்ப்பு இருக்கின்றதே, அதுதான் நம்முடைய அனைத்து துயரங்களுக்கும் முழுக்க முழுக்கக் காரணம்.

ஆனால், அவைகளினால்தான் நாம் துன்பப் படுகின்றோம் என்பதைக்கூட அறிய முடியாத அளவிற்கு நம் மனம் அதிலே அளவு கடந்த அபிமானம் வைத்திருக்கின்றது.

அதாவது, நம்முடைய மனதினால் நாம் ஏற்றி வைத்துக் கொண்ட விசய சுகங்களை மற்றவர்களுக்கும் கூற வேண்டும், அல்லது கொடுக்க வேண்டும் என்ற நம்முடைய ஆர்வம்.

இந்த ஆர்வக்கோளாறுதான் நம்மிடையே மன அமைதியை இழக்கத் தடையாக இருக்கின்றது.

இந்த உண்மையை மனதை விசாரிக்காமல் விடைக் காண முடியாது.

அப்படி மனதை விசாரித்து, புத்தி சக்தியை விரிவாக்கிக் கொண்டோமேயானால், நாம் மனிதப் பிறவியின் மகத்துவத்தை நன்கு அறிந்தவர்களாக ஆகிவிட்டோம்.

அந்த மகத்துவமே நாம் **மனிதன்** என்பதில் மட்டும் இல்லை. அதையும் கடந்த மகத்தான ஒரு நிலையில் உண்டாகின்றது.

அது ஒரு பேரானந்த நிலை, பெரும் அமைதி நிலை,

அந்த ஆனந்த அனுபவம் நமக்கு உண்டாக வேண்டு மானால், உடனடியாக நாம் மனதில் உதிக்கும் எண்ணங்களின் ஏற்ற, இறக்கங்களை சற்று கவனிக்கத் தொடங்க வேண்டும்.

அதன் வாயிலாக, இந்த அற்ப எண்ணங்கள் ஏன் உண்டாகின்றது? இதன் அடிப்படைக் காரணம் எங்கு நம்மிடையே ஏற்றி வைக்கப்பட்டுள்ளது?

இதற்கு யார் காரணம்? என்ற ஆராய்ச்சி உண்டாகின்றது.

இதற்கு நிச்சயம் மற்றவர்கள் கிடையாது.

ஏன் எனில், அவர்கள் தவறான விசயங்களை நம்மீது ஏற்றி வைக்க முயற்சித்தாலும், நமக்கு இருக்கின்ற சுயபுத்தி எங்கே போனது?

அதன் உண்மைத் தன்மையை ஆராய வேண்டாமா?

அதற்குத்தானே புத்தி சக்தி மனிதனுக்கு கொடுக்கப் பட்டுள்ளது!

இது தெரியாமல், கொரோனா முதல் கொட்டாவி வரை கண்டதையும் காணாமலேயே பேசுகின்றோம். யார் என்ன கூறினாலும், அதை அப்படியே ஏற்றுக் கொள்கின்றோம்.

அதற்கு எதற்கு மனிதப்பிறவி?

மற்ற பயிற்றுவிக்கப்பட்ட மிருகங்களைப் போன்றே வாழ்ந்து விட்டுப் போகலாமே?

எந்த ஒரு பொருளின் உண்மைத்தன்மையையும் அறியாமல், அதனை அப்படியே ஏற்றுக் கொள்வது என்பது அறிவுடையவர்கள் செயல் ஆகாது.

இந்த அறியாமையினால்தான் நாம் நம்மை அறியாமல் இருக்கின்றோம்.

உண்மையில் நாம் அமைதியே சொரூபமானவர்கள். ஆனந்தமானவர்கள்.

யோசித்துப் பாருங்கள்!

நீங்கள் குழந்தையாக இருந்த பொழுது, எவ்வளவு சந்தோசமாக இருந்தீர்கள்.

அப்பொழுது எவ்வளவு அமைதியாக, ஆனந்தமாக இருந்தீர்கள்.

அப்பொழுது, எந்த பிரச்சனைகளும் உங்களுக்கு கிடையவே கிடையாது.

பசி எடுத்தால், உணவிற்காக மட்டும் அழுவீர்கள். வயிறு நிறைந்ததும் விளையாடிக் கொண்டு தொட்டிலில் படுத்துக் கொண்டிருப்பீர்கள்.

இந்தக் குழந்தைப் பருவத்தின் நிலையிலேதான் மற்ற மிருகங்கள், பறவைகள் இன்னமும் வாழ்கின்றன.

ஆனால், மனிதன் வளர்ந்து வருகின்ற பொழுது, மற்றவர்களால் எத்தனை, எத்தனை விசயங்களை ஏற்றி வைத்துக் கொண்டு வளர்கின்றான்.

ஏற்றி வைத்த விசயங்களை எல்லாம் அறிவாக எண்ணிக் கொள்கின்றான்.

அந்த வகையிலே வளரும் பொழுதே மனிதனின் மகத்தான வாய்ப்பேசும் சக்தியை தனது மொழியிலேயே முடக்கிக் கொள்கின்றான்.

அது முதன் முதலில் அவரவர்கள் தாய் மொழியில் தொடங்கி இறுதியில், அவரவர்கள் கடவுள், மதம் என்று இன்றுவரை நீண்டுக் கொண்டே போகின்றது.

இன்றுவரை இதற்கு தீர்வே இல்லை.

ஏன் எல்லையே இல்லை.

எப்படித் தீர்க்க முடியும்?

யாரால் தீர்க்க முடியும்?

மகான்களாலா?

யோசித்துப் பாருங்கள்!

எத்தனை எத்தனை மகான்கள், அதுவும் அவரவர்கள் மொழிகளில், அவரவர்கள் சமயங்களில், அவரவர்கள் மதங்களில் என்று அவரவர்களுக்கு பிடித்தமான எத்தனை எத்தனை மகான்கள்.

சரி!

அவரவர்களுக்கு பிடித்தமான மகான்கள், அவரவர்களுக்கு பிடித்தமான மொழியில் கூறியதை நாம் அப்படியே ஏற்றுக் கொண்டிருந்தாலும்கூட, இன்று எவ்வளவு பிரச்சனைகளை நாம் தீர்த்திருக்க முடியும்.

முடிந்ததா?

யோசித்துப் பாருங்கள்!

நாம் எங்கே போய்க் கொண்டிருக்கின்றோம்?

மன அமைதியின்றி, ஆனந்தத்தை வெளியே புறக் கரணங்களின் (கண், காது, மூக்கு, நாக்கு, தோல்) வாயிலாக தேடிக்கொண்டிருக்கின்றோம்.

மற்ற எந்த ஜீவர்களுக்கும் கிடைக்காத, நமக்கு மட்டுமே கிடைத்துள்ள அகக்கரணங்களை (மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்) நாம் சரியாகப் பயன்படுத்தாமல் மற்ற உயிரினங்களைப் போன்றே வாழ்ந்துக் கொண்டு, இன்பத்தை மட்டுமே அடைய விரும்புகின்றோம்.

இது நடைமுறை சாத்தியம் ஆகுமா?

என்றாவது, இதைப்பற்றி யோசித்திருக்கின்றோமா?

மனம் என்பது எண்ணங்களின் தொகுப்பு என்று அறிந்து வைத்திருக்கின்றோம். ஆனால், நம்முள்ளே தொகுத்து வைத்துள்ள விசயங்களை ஒரு நாளாவது ஆராய்ந்து பார்த்திருக்கின்றோமா?

மனிதர்களாகிய நாம் அனைவருமே அடிப்படை விசயத்தில் ஆட்டம் கண்டு விடுகின்றோம்.

அதுதான் நம்முடைய இயல்பான அன்பு, சந்தோஷம், சாந்தம் என்பதே நமக்கு அடிப்படை என்பதை அறிய முடியாமல் ஏற்றி வைத்துக் கொண்ட அனாவசியமான விசய, சுகங்களை அறிவு என்று கருதி, அரிதான உண்மையை அறியாமலேயே இருக்கின்றோம்..

ஏன்?

நாம் ஏற்றிவைத்துக் கொண்ட அல்லது மற்றவர்களால் நமக்கு ஏற்றி வைக்கப்பட்டுள்ள விசய, சுகங்கள் நம்முடைய உண்மையான இயல்பை அறிந்துக் கொள்வதற்கு பெரும் தடையாக இருக்கின்றது.

இல்லையே நான் என்னுடைய குழந்தைகளிடமும், மனைவியினிடத்திலும் அன்பாகத்தான் இருக்கின்றேன், சந்தோஷமாகத்தான் இருக்கின்றேன் என்று கூறுவீர்களே யானால், உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டிருக்கின்றீர்கள் என்றுதான் பொருள்.

எப்படி என்றால், நீங்கள் அன்பும், அமைதியும், ஆனந்தமும் கொண்டவர்கள் என்றால், அது உங்கள் இடத்தில் இருந்து வெளிப்பட்டு, மற்ற அனைவரிடத்திலும் அல்லவா பிரதி பிம்பிக்க வேண்டும்.

ஏன்? உங்கள் அருகே வருபவர்கள் உங்களைக் கண்டதும் எரிந்து விழுகின்றார்கள்.

எத்தனைப் பேருக்கு உங்களைப் பிடித்திருக்கின்றது?

உங்கள் சொந்தக்காரர்களுக்கே உங்களை பிடிக்க வில்லையே.

ஏன்?

அதனால், உங்களுக்கும் மற்றவர்களின் மீது விருப்பு, வெறுப்பு அல்லவா வருகின்றது?

எதில் என்று கேட்டீர்களேயானால், ஏகப்பட்ட விசயங்களைக் கூறலாம். இருப்பினும், அவைகளில் மொழி, இனம், ஜாதி, மதம், கடவுள், அரசியல் என்று எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்.

இதில் உங்களிடம் ஏற்றத்தாழ்வுகள் வெளிப்படுகின்றதே.

என்ன காரணம்?

அதாவது, தனக்கு விருப்பமான, தன்னுடைய என்பதில் மட்டும் அன்பும், சந்தோசமும், விருப்பமும் உண்டாகின்றது.

அதுவே, மற்ற உயிரினங்கள், அல்லது மற்றவர்கள் என்று வரும் பொழுது, உங்களுக்கு அவைகளின் மீது வெறுப்பு உண்டாகின்றதே.

ஆகவே, நீங்கள் *அன்பின் சொரூபன்* என்றும், *அமைதியின் வடிவினன்* என்றும், மற்றும், *ஆனந்தத்தின் ஆர்வலன்* என்றும் எப்படி உங்களைக் கூற முடியும்?

இந்த நிலையில் நீங்கள் **உலக சமாதானத்தை** எப்படி எதிர்ப்பார்க்க முடியும்?

அமைதிப் பூங்காவாக இந்த உலகத்தை மாற்றிக் கொண்டு, அதிலே ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டும் என்றால் அது எப்படிச் சாத்தியம் ஆகும்?

யோசித்துப் பாருங்கள்!

நம்மை நாம் மாற்றிக் கொள்ளாமல், மற்றவர்கள் மாற வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பது எவ்வளவுப் பெரிய அறியாமை!

இந்த அறியாமை அகல வேண்டும் என்றுதான் அனைவருமே எதிர்ப்பார்க்கின்றோம். ஆனால், நம்மிடம் உள்ள அறியாமையை நாம் அறிய மறுக்கின்றோம்.

இது புரியாமல், நாம் மக்கள் ஒவ்வொருவரிடத்திலும் சென்று, நீங்கள் அமைதியாக இருங்கள், அன்பாக இருங்கள். அப்படி இருந்தீர்களேயானால் இந்த உலகம் அமைதியும், சந்தோசமும் நிறைந்ததாக மாறிவிடும் என்று கூறிக்கொண்டிருக்க முடியுமா?

அது நடைமுறை சாத்தியம்தானா?

யார்தான் நீங்கள் கூறுவதைக் கேட்பார்கள்?

இதைத்தான் ஏற்கனவே எத்தனையோ மகான்கள் வந்து கூறிவிட்டார்களே?

அவர்கள் கூறியதை ஏற்றுக்கொள்ளாத இந்த மக்கள் நீங்கள் கூறியவுடன் மட்டும் ஏற்றுக் கொள்வார்களா?

நீங்கள் என்ன அந்த அளவிற்கு மற்றவர்களால் அறியப்பட்ட பிரசித்திப் பெற்றவரா?

பிரசித்தி பெற்ற பெரிய, பெரிய மகான்கள் பலர் கூறியதை இவர்கள் அப்படியே ஏற்றுக் கொண்டிருந்தால்,

இன்று இந்த உலகம் அமைதிப்பூங்காவாக மாறி, அனைவரும் ஆனந்தமாக அல்லவா இருந்திருக்க வேண்டும்.

ஆனால், உலகம் அப்படியா இருக்கின்றது?

உண்மையில்! நம்முடைய பார்வையில் இன்று இந்த உலகம் எப்படி இருக்கின்றது?

யோசித்துப் பார்த்தீர்களேயானால், மிகவும் துக்கம் நிறைந்ததாக காணப்படுகின்றதா? அல்லது மகிழ்ச்சி நிறைந்ததாக காணப்படுகின்றதா?

கூறுங்கள் பார்க்கலாம்?

இந்த உலகம் மிகவும் துயரம் நிறைந்ததாகவும், அமைதி குறைந்ததாகவும் காணப்படுகின்றது என்று நீங்கள் கூறினீர்களேயானால், நிச்சயம் நீங்கள் அமைதியை இழந்து, துயரத்துடன்தான் இன்றுவரை காணப்படுகின்றீர்கள் என்பது தெளிவாகத் தெரிகின்றது.

அதுவே, நீங்கள் இந்த உலகம் முழுவதும் அமைதியாகவும், ஆனந்தம் நிறைந்ததாகவும் இருக்கின்றது என்று கூறமுடியுமானால், நீங்கள் அமைதியின், ஆனந்தத்தின் இருப்பிடம் என்று அறிந்துக் கொள்ள முடிகின்றது.

ஆனால், இது எத்தனைப் பேருக்குத் தெரியும்!

ஆம், இது அவரவர்களின் **மனதினால்** உண்டாகின்ற உலகம்.

அவரவர்களின் எண்ணத்திற்கு ஏற்றாற்போல, இந்த உலகத்தைப் படைத்துக் கொள்கின்றோம். அதற்கேற்றவாறு காண்கின்றோம்.

இவ்வாறு படைக்கப்பட்ட உலகிலே மனிதனுக்கு உண்டான **மரணபயம்** இருக்கின்றது அல்லவா? அதுவே, அவனது **அறியாமை** என்பதை நன்கு அறிந்துக் கொண்ட சிலர், அதை தங்களுக்கு சாதகமாக மாற்றிக் கொண்டு, மற்றவர்களிடம் பணம் பறித்துக் கொண்டிருக்கின்றார்கள்?

அவர்கள் மனதில் படைத்துக் கொண்ட உலகம் அப்படி! அதனால் அவர்களைப் பொறுத்தவரையில் ஏமாளிகள் நிறைந்த உலகம் இது.

யோசித்துப் பாருங்கள்!

உண்மையிலேயே **மரணம்** யாருக்கு இல்லை?

மனிதனைத் தவிர மற்ற ஜீவர்கள் இறப்பதில்லையா?

ஐந்தறிவு படைத்த மிருகங்கள்கூட தங்கள் இறப்பைப் பற்றி கவலைக் கொள்வதில்லை.

ஏன்?

அவைகளுக்கு மற்றவர்களால் ஏற்றி வைக்கப்பட்ட, திணிக்கப்பட்ட அறிவு கிடையாது. அதனால், அவைகள் தன் சுயத்தில் இயல்பாக இருக்கின்றன.

பொதுவாக, உடல் அழிவிற்கு உட்படும் பொழுது, மரணத்தை அடைந்தாக வேண்டும் என்ற அடிப்படை

அறிவைக் கூட அவைகள் தங்களுக்குள் ஏற்றி வைத்துக் கொள்ளவில்லை.

ஏன் எனில், அது அவைகளுக்கு அவசியமும் இல்லை.

ஆனால், மனிதனோ, இருக்கின்ற எல்லாவற்றையும் அறிகின்றேன் என்று, ஏகப்பட்ட விசயங்களை ஏற்றி வைத்துக் கொண்டு, அதன் அடிப்படையில் தன்னை '**அறிவாளி**' என்று அழைத்துக் கொண்டிருக்கின்றான்.

ஆனால், உண்மையில் *ஆறறிவு* கொண்ட அறிவாளி என்று தம்பட்டம் அடித்துக் கொள்கின்ற இவன், இன்று *ஓரறிவு* படைத்த நுண்கிருமியிடம் சிக்கிக் கொண்டு சிரமப்படுகின்றான்.

எதனால்?

மற்றவர்களால், இவன் மீது ஏற்றி வைக்கப்பட்ட '**கொரோனா**' என்ற ஒரு புதிய அறிவினாலே, இவன் நிம்மதியின்றி, அமைதியின்றி, இறப்பைக் கண்டு பயந்துக் கொண்டு, ஏகப்பட்ட துன்பத்திற்கு ஆளாகி வருகின்றான்.

ஏன்?

**மரண பயம்!**

மரணம் யாருக்கு?

உடலுக்குத்தானே!

ஆனால், இவன் **உடலா? உயிரா? ஆன்மாவா?**

உடல்தான் இவன் என்றால், இவன் இந்த உடலை எடுப்பதற்கு முன்பு எங்கு இருந்தான்?

இந்த உடலை விட்டவுடன் எங்கு இருப்பான்?

அப்பொழுது இவன் எப்படி இருப்பான்? அதாவது, எந்த உடலில் இருப்பான்?

என்றாவது இதைப்பற்றி நாம் யோசித்துப் பார்த்திருக்கின்றோமா?

யோசிக்க மாட்டோம்! ஏன் என்றால்?, இருக்கின்ற இந்த விசய சுகங்களின் மீது அப்படி ஒரு ஆர்வம். அதை இழக்க விரும்பாமல், இன்னும் சில விசய சுகங்களை நோக்கி ஓடிக் கொண்டிருப்பதினாலே, யோசிப்பதற்கு நேரமே இல்லை.

வேகமாக விவேகமில்லாமலேயே ஓடி, ஓடி, வாழ்க்கையின் இறுதியில் திரும்பிப் பார்க்கையில் என்ன இருக்கும்? எதை அடைந்தோம் என்று யோசிக்க வைக்கும்.

அப்பொழுது, யோசித்து என்ன பிரயோஜனம்?

வாழும் பொழுதே நம் வாழ்க்கையின் நிகழ்வுகளை நிச்சயம் யோசித்துப் பார்க்க வேண்டும்.

நாம் தூங்கும் போது ஆழ்ந்த உறக்கத்தில் இந்த உலகத்தை இழந்து விட்டல்லவா நன்றாகத் தூங்குகின்றோம். அப்பொழுது மட்டும், நமக்கு நம்முடைய சொத்து மதிப்பு தெரிவதில்லை. அருகே உள்ள உறவுகள் தெரிவதில்லை.

ஏன்? நம்மையே நமக்குத் தெரியவில்லை.

இந்த அனுபவம் நம் மரணத்திற்கு ஒரு முன்னோட்டம் (மரண அனுபவம்) என்பதை நாம் ஏன் அறிய மறுக்கின்றோம்?

என்றாவது ஒரு நாளாவது இரவில் இவ்வாறு தூங்குவதை அதாவது, தன்னை மறந்து தூங்குவதை நாம் நினைத்துப் பார்த்தோம் என்றால், இறப்பும் இதுப்போலத்தான் இருக்கும் என்பதை எளிதாக நாம் அறிந்துக் கொள்ளலாம் அல்லவா?

ஆனால், கொடுக்கப்பட்ட அரிதான அறிவை இதற்காக ஆராயாமல், மற்ற ஏகப்பட்ட விசய சுகங்களின் பின்னால் ஆராய்ந்து, அவைகளில் மனதையும், புத்தியையும் ஓட வைத்து ஓடிக் கொண்டிருக்கின்றோம்.

இந்த மன ஓட்டம் நம்முடைய இறப்பிற்கும் பிறகு தொடர்வதால்தான், நம்மால் அடுத்த ஒரு உடல் எடுத்து மீண்டும் அவைகளை அனுபவிக்க வேண்டிய அவசியம் உண்டாகின்றது.

இந்த பிறப்பு, இறப்பு என்பதெல்லாம் எனக்கு கிடையாது, அது இந்த மனதிற்குத்தான் என்பதை என்று நாம் நம்மையே விசாரித்து அறிந்துக் கொள்கின்றோமோ, அன்றே நாம் நமக்குக் கிடைத்துள்ள இந்த மனித தேகத்தின் மகத்துவத்தை அறிந்துக் கொண்டவர்களாக ஆகிவிட்டோம்.

இந்த ஆராய்ச்சி எல்லாம் இந்த மனித உடலில் இருக்கின்ற பொழுது, இந்த மனதை ஆராயலாமே தவிர, மற்ற

எந்த ஜீவர்களின் உடலில் வாழ்ந்துக் கொண்டிருந்தாலும், இந்த ஆராய்ச்சிகளெல்லாம் மேற்கொள்ள முடியாது.

காரணம், இவ்வாறு பகுத்தறியும் அறிவு அவைகளுக்கு கிடையாது.

இதற்காகத்தான் இந்த பகுத்தறியும் புத்தி சக்தியே நமக்குக் கிடைத்துள்ளது. அத்தகைய இந்த பகுத்தறிவே மனிதனை மகத்தானவனாக மாற்றக் கூடியதாக இருப்பதால், இதனை சரியான பாதையில் வழி நடத்திச் செல்ல சில வழிகாட்டிகளும் அவசியமாகின்றது.

அந்த வகையிலே **கல்வி, குரு** போன்ற தேவைகள் மனிதனுக்கு பக்க பலமாகின்றன.

ஆனால், இன்றைய கல்வியும் சரி, கல்வி போதிக்க வருகின்ற ஆசிரியரான குருவும் சரி, அவர்கள் தாங்கள் ஏற்றி வைத்துக் கொண்ட தவறான அறிவின் அடிப்படையிலே அவைகளை நமக்கு போதிப்பதால், பெரும்பாலும் நம்முடைய அறிவு அவைகளை நோக்கியே போகின்றது.

யோசித்துப் பாருங்கள்!

நம்முடைய மனம், புத்தி எதை நோக்கி நம்மை இழுக்கின்றது என்பதை நாம் நம் மனதை விசாரித்துப் பார்க்கின்ற பொழுது மட்டுமே அறிந்துக் கொள்ள முடியும்.

அதாவது, நாம் ஏற்றிவைத்துக் கொண்டுள்ள விசயங்களான பல எண்ணங்களின் வெளிப்பாட்டை வைத்து, அவைகளை அறிந்து ஆய்வு செய்ய முடியும்.

இங்கு **உண்மை** ஒன்று மட்டும்தான் இருக்கின்றது, அதனால்தான் அது உண்மை (சத்தியம்) என்று அழைக்கப் படுகின்றது.

ஆனால், பொய்கள் பலவாக இருக்கின்றன. அவைகள், பலவாறாக மாற்றத்திற்கு உட்பட்டுக்கொண்டே இருப்பதினால் தான் அவைகளை **பொய்கள்** என்கின்றோம்.

ஆகவே, அந்த பொய்கள் ஏற்பதினால், அவைகள் உண்மையாகி விட முடியாது.

எனவே, முதலில் உண்மைக்கும், பொய்களுக்கும் உள்ள வித்தியாசத்தையே, இன்றைய கல்வி முறையால் விளங்க வைக்க முடியவில்லை என்பதைக் காணும் பொழுது, நாம் எப்படியெல்லாம் ஏமாற்றப்படுகின்றோம் என்பதை நன்கு அறிந்துக் கொள்ள முடிகின்றது.

அந்த வகையிலே தற்பொழுது ஏற்றி வைக்கின்ற அறிவு என்ற அனைத்து விசயங்களுமே மனிதனை மகத்தானவனாக மாற்றுவதற்குப் பதிலாக மட்டமானவனாக மாற்றிக் கொண்டிருப்பதை நாம் நம்முடைய நடைமுறை வாழ்க்கையில் வாழுகின்றவர்களை வைத்து, அவர்களின் வாயிலாக நமக்கு கிடைக்கும் அனுபவத்தில் இருந்து, நன்கு அறிய முடிகின்றது.

எனவே, மனிதன் தனக்கு கொடுக்கப்பட்ட பிரத்யேக அறிவான **ஆறாவது அறிவு** என்கின்ற மனதில், அவசியமற்ற புத்தியாக **மரண பயத்தை** விதைப்பது என்பது, யாருக்கு இலாபம்?

யோசித்துப் பார்த்தீர்களேயானால், அதிக விளைச்சல்கள் யாருக்கு தேவையோ, அவர்கள் மட்டுமே அந்த ஆதாயத்தை உண்டாக்கும் பயிரை (பயத்தை) விதைக்க முடியும்.

இந்த உண்மையை தனக்கு கொடுக்கப்பட்ட பகுத்தறிவால் நன்கு பகுத்தறிந்து, அதன் உண்மைத் தன்மையை விசாரித்துப் பார்க்கின்றவனே உண்மையில் **அதிபுத்திசாலி** எனப்படுவான்.

ஆகவே, இனியாவது கொடுக்கப்பட்ட அறிவைக் கொண்டு, இந்த மனதை விசாரணை செய்து, அதில் விதைக்கப்பட்ட விசய சுகங்களின் விளைச்சலுக்கு இடையூறு செய்கின்ற களைச் செடிகளான இதுப்போன்ற புல்லுருவிகளை (விவேகமற்ற விசயங்களை) கலைந்து விட்டால், மனிதனுக்கு **மரண பயம்** வரவே வராது.

மரணபயம் வருவதற்கு முதற்காரணம் **நான் இந்த உடல்** என்று மனிதன் தன் உடம்பை அபிமானித்துக் கொண்டிருப்பதினால், இதுப்போன்ற தவறை செய்கின்றான்.

அந்த உடம்பை காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில், பல்வேறு மருத்துவ முறைகளைக் கைக்கொண்டு, அதற்கு பக்க பலமாக பல மருந்துகளையும் உணவாக உட்கொள்கின்றான்.

ஆனால், இதுப்போன்ற இரசாயண மருந்துகளை நாம் கட்டாய உணவாக எடுத்துக் கொண்டிருப்பதற்கு அடைப்படைக் காரணமான, மற்ற இராசயண மருந்துகளையே

நாம் உணவுகளாக உட்கொள்கின்றோம் என்பதைக்கூட அறிய முடியாத அளவிற்கு நாம் அறியாமையில் இருக்கின்றோம்.

அதாவது, '**அறிவு**' என்று ஏற்றிவைக்கப்பட்ட ஏகப்பட்ட விசய சுகங்கள் நம்மை நல் வழியிலே வாழ்வதற்கு விடாமல் இடையூறாகவே இருக்கின்றது.

ஆனால், இவைகளைத்தான் இன்றைய நவீன கல்வியின் வாயிலாக மேலும், மேலும் ஏற்றி வைத்துக் கொண்டுள்ளோம். இனியும் வரும் மனித சமுதாயத்திற்கு ஏற்றி வைக்கப் போகின்றோம்.

இதுவே, நம்முடைய அறியாமையின் மிகப்பெரிய அவலம்.

இயற்கையாக பிறந்து, இயற்கையுடன் ஒன்றி வாழ்ந்து, இயற்கையாகவே மரணத்தை எய்தும் (இயற்கை எய்தினார்) மனிதனை, செயற்கையாக பிறக்க வைத்து, செயற்கையாக வாழ வைத்து, செயற்கையாக சாகடிக்கும் சதி இந்த கல்வித் திட்டம்.

இந்த கல்வித் திட்டம் யாரால் வகுக்கப்பட்டது என்று என்றாவது யோசித்திருக்கின்றோமா?

எந்தக் கல்வித் திட்டத்தை நாம் இன்று வரையில் நடைமுறையில் வைத்திருக்கின்றோம்?

இதுப்போன்ற கல்வித் திட்டங்களினால் மனிதன் மனிதனாக வாழ முடியாவிட்டாலும் பரவாயில்லை, மிருகம் ஆகவல்லவா மாறிக் கொண்டிருக்கின்றான்!

அப்படிப்பட்ட மிருகமாகத்தான் இந்த (மனித உடலில்) மனிதன் இருக்கட்டும் என்றால், மேலும் இந்தக் கல்வித் திட்டம் அப்படியே தொடரட்டும்.

ஆனால், உண்மையில் நாம் எப்படி வாழ்ந்துக் கொண்டிருக்கின்றோம்?

யோசித்துப் பாருங்கள்!

எதிலும் சுயநலம். எதிலும் கலப்படம்.

ஏன் மனிதன் இப்படி சீர்கெட்டு அழிகின்றான்.

அவன் கற்றுக் கொண்ட கல்வித்திட்டம் அப்படி!

மனிதனின் அத்தியாவசிய உணவு உற்பத்தியில் நவீன கல்வியைக் கொண்டு வந்து புகுத்தி, எதிலும் மருந்துகள் இல்லாமல் விவசாயமே இல்லை என்ற நிலைக்கு நாம் இன்று தள்ளப்பட்டுள்ளோம்.

படித்துவிட்டுத்தான் நம் முன்னோர்கள் விவசாயம் செய்தார்களா/

அப்படி படிக்காமல் செய்த விவசாயத்தில் இதுப்போன்ற விஷங்கள் விதைக்கப்பட்டனவா?

விவசாயத்தில் இன்று எதுவுமே மருந்துகள் இல்லாமல் கிடையாது. அனைத்துப் பயிர்களும் மருந்துகளினால்தான் விளையும்படி விதைக்கப்படுகின்றன.

அதற்கேற்ற விசேஷ இரகப் பயிரினங்களையே நன்கு கற்றவர்களால் நடைமுறைப் படுத்தப்படுகின்றன.

நல்ல நோய் எதிர்ப்பு சக்தி கொண்ட பயிரினங்கள் முற்றிலுமாக அழிக்கப்பட்டு வருகின்றன.

மருந்து இல்லாமல், இயல்பாக விளைய முடியாத பயிரினங்களையே அதிகம் பயிரிட்டு, அதற்காக உரங்களையும், பூச்சிக் கொல்லி மருந்துகளையும் பயிர்களுக்கு கொடுத்து, அந்தப் பயிர்களை நாசம் செய்வது மட்டுமின்றி, அவைகளை உண்ணும் மக்களையும் பல்வேறு நோய்களுக்கு உட்படுத்தி, உணவுச் சக்கரத்தை அழிக்கும் நாசகாரச் செயல்களை நாம் செய்துக் கொண்டிருக்கின்றோம் என்பதை எத்தனைப் பேர்கள் அறிவார்கள்.

மனிதர்களை நோயாளிகளாக்கி, மருத்துவமனைகளின் வாயிலாக, மேலும் பல மருந்துகளை விநியோகிக்கும் வித்தை (கல்வி) இன்றை நவீன கல்வி முறைகளில் நம்மை அறியாமலேயே புகுத்தி விடப்பட்டுள்ளன.

இந்த இராசயண தெளிப்பு மருந்துகளால், விவசாயத்திற்கு நன்மை பயக்கும் பூச்சி இனங்கள் முற்றிலுமாக அழிக்கப்படுகின்றன. இந்த புழு, பூச்சிகள் இல்லாத காரணத்தினால், ஏகப்பட்ட பறவை இனங்கள் உண்ண உணவு இன்றி அழிந்து வருகின்றன. இவைகளின் அழிவை நம் கண்முன்னே நாம் காணுகின்றோம். அந்த வகையிலே, நாம் அதிகமாகப் பார்த்து இரசித்த **சிட்டுக் குருவி** இனம் இன்று நம்மிடையே இல்லாமலேயே போய் விட்டது.

இதற்குக் காரணம், இவர்கள் பரிந்துரைக்கின்ற இராசயணக் களைக்கொல்லி மருந்துகளால், பறவைகளுக்கு புல், பூண்டு போன்ற உணவுகளான பயிர்களும் விளைச்சல் இன்றி, இந்த புல், பூண்டுகளை உண்ண வருகின்ற புழு, பூச்சிகளையும் இந்த மருந்துகள் கொன்று விடுவதினால், எத்தனையோ பறவை இனங்கள் உண்ண உணவுகள் இன்றி, ஆதரவு கேட்டு, ஆட்கள் அதிகம் உள்ள நகரத்திற்கு அடைக்கலமாக வருகின்றன. அந்த வகையிலே மலைகளிலும், சோலைகளிலும் வாழ்ந்த மயில்கள் இன்று பெரு நகரங்களில் உணவுக்காக அலைகின்றன.

ஆனால், நாம் அடைக்கலம் கொடுக்கின்றோமா?

அவைகளை கொன்று அல்லவா தின்கின்றோம்!

யோசித்துப் பாருங்கள்!

அவைகளுக்கு உணவு கொடுக்காமல், இந்த மனிதர்கள் அவைகளை உணவாக்கிக் கொள்கின்றனர். இதுதான் மனிதனின் பகுத்தறிவு கற்று வைத்திருக்கின்ற கல்வி அறிவா?

அதுவே, படிக்காத புத்தியில்லாத மற்ற உயிரினங்கள் எதுவுமே, தன் இனத்தை தானே அழிவுப்பாதைக்கு அழைத்துச் செல்லாது. புத்தி சக்தியை ஆறாவது அறிவாக, பிரத்யேகமாக அடைந்த மனிதன் மட்டுமே தன் இனம் முதற்கொண்டு மற்ற அனைத்து உயிரினங்களின் அழிவுக்கும் காரணமாக அமைகின்றான்.

மனிதன் தனக்கு கொடுக்கப்பட்ட அகக்கரணமான புத்தி சக்தியை தன் உள்ளத்தின் உள்ளே ஆராயாமல், வெளியே உள்ள புறக்கரணங்களைக் கொண்டு புத்தியைத் தீட்டியதினால், அவனுக்கு இதுப்போன்ற **குறுக்கு புத்தி** அதிகமாகி விட்டது எனலாம்.

அதுவே, அவனுக்கு கிறுக்கு பிடிக்கவும் காரணமாக இருக்கின்றது என்பதை அறியாமல், ஏகப்பட்ட மனநல மருத்துவர்களை நம்முடைய நவீன கல்வித் திட்டத்தின் வாயிலாக நாம் உண்டாக்கிக் கொண்டிருக்கின்றோம்.

அதாவது, இந்த புத்தி மனிதனிடம் எங்கு இருக்கின்றதோ, அங்கே ஆராயாமல், அது இல்லாத இடத்திலே இவன் ஆராய்வது என்பது எப்படி இருக்கின்றது என்றால், தன் வீட்டிற்குள் தொலைந்த ஒரு பொருளை, தனது வீட்டிற்கு வெளியே சென்று தேடும் அறிவீனமானச் செயல் போன்றது எனலாம்.

இதைத்தான் இன்றைய விஞ்ஞானம் நவீன கல்வி என்ற பெயரில் செய்துக் கொண்டிருக்கின்றது. இத்தகைய மனிதர்கள் உண்மையான **மெய்ஞ்ஞானத்தை** ஒரு பொழுதும் அறிந்துக் கொள்ள முடியாது.

எனவே, மனிதன் தேவையற்ற இதுப்போன்ற வெளி விசாரணையில் இவனது மனதை ஈடுபடுத்தி, புத்தியை வெளியே தேடி ஏற்றிக் கொண்டதினால், இந்த **மரண பயம்** இவனுக்கு வந்து விட்டது.

அதுவே, உள் விசாரணையில் இவனது புத்தியைப் பயன் படுத்தியிருந்தால், இவனுக்கு மரணம் என்பது தனக்கு கிடையவே கிடையாது என்பதை எளிதாக அறிந்துக் கொள்ள முடியும்.

காரணம், நான் இந்த அழியக்கூடிய உடல் அல்ல! அதற்கு அப்பாற்பட்ட என்றும் அழியாத '**ஆன்மா**' என்ற **உண்மை அறிவை** அடைந்திருப்பான்.

ஆனால், இவன் ஏற்றி வைத்துக் கொண்ட அறிவினாலே, இந்த உடலை **"நான்"** என நினைத்துக் கொண்டு, இந்த உடலைக் காப்பாறிக் கொள்வதற்காக ஏகப்பட்ட புத்தகங்களை மருத்துவத்திலும், ஆன்மீகத்திலும் எழுதி, இதனை இன்றைய கல்வி முறையில் புகுத்தி, மேலும் இதுப்போன்ற ஏகப்பட்டதை இவன் மனதிலே ஏற்றி, கற்றுக் கொள்ளும் பொழுது, இதுப்போன்ற அறியாமையின் உச்சத்தில் இருக்கின்ற இவர்களை இவர்கள் படைத்துக் கொண்ட எந்த மதத்தின் இறைவனாலும் காப்பாற்ற முடியாது என்பதையும் இவர்கள் அறிய முடியாத அளவிற்கு அவல நிலைக்குத் தள்ளப்பட்டு வருகின்றனர்.

மேலும், தானாகவே என்றோ ஒரு நாள் சாகப்போகின்ற இந்த உடலை, இவன் ஏற்றி வைத்துக் கொண்ட **அறிவு** என்ற புதிய கொள்கையினால், பல்வேறு மருந்து, மாத்திரைகளையே உணவுக்குப் பதிலாக உட்கொண்டு, இந்த உடலை இன்றே சாகடிக்கத் தயாராக இருக்கின்றான். இதுதான் இவனது இன்றைய கல்வி கற்றுக் கொடுத்துள்ள **பகுத்தறிவு** எனலாம்.

இதிலே இன்னும் சிலரோ, பகுத்தறிவு என்பது கடவுள் மறுப்புக் கொள்கை என்று கூறிக்கொண்டு, அந்த ஏற்றி வைத்துக் கொண்ட அறிவினாலே, ஏகப்பட்ட பகுத்தறிவுக் கொள்கைகளை, மக்களுக்கு புரட்சி என்ற பெயரில் பல புதுமைகளைக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தவர்கள் எல்லாம், தற்பொழுது கொரோனா நுண் கிருமியின் கொலைப் பாதகச்செயலால் சற்று பரபரப்புக்குன்றி காணப்படுகின்றனர்.

இறைவனை யார் என்று அறியாத அனேக மூடர்கள் இறைவனின் பெயரால் ஏகப்பட்ட புதிய அறிவை, அறியாமையில் இருக்கும் இந்த மக்களுக்கு மூட நம்பிக்கையின் காரணமாக ஏற்றி வைத்து, பல்வேறு பரிகாரங்களை மக்களுக்குச் செய்யச் சொல்லி பணம் பார்த்தவர்கள் எல்லோருமே, இன்று இந்தக் கொரோனாக் கிருமியின் வருகையின் காரணமாக தங்கள் வருமானத்தை இழந்து, தங்கள் வாழ்வாதாரத்திற்கு வேண்டிய பணத்தைச் சம்பாதிக்க மேலும் பல புதிய வழிகளை தேடிக் கொண்டிருக்கின்றார்கள்.

ஐந்து அறிவு படைத்த மிருகங்கள் என்றாவது மருத்துவனைக்கு போகின்றனவா? அல்லது தனது குறைகளைத் தீர்க்கக்கூறி கோவிலுக்குத்தான் போகின்றனவா?

இத்தகைய மூட பழக்க வழக்கங்கள் அவைகளின் அறிவில் ஏற்றி வைக்கப்பட வில்லை. அதனால் மிருகங்களுக்கு அவைகள் அவசியம் இல்லை. காரணம், அவைகளுக்கு **மரணத்தைப் பற்றிய பயமே இல்லை.**

மேலும், அவைகள், தன் உடல் இயற்கையான அழிவுக்கு உட்படும் பொழுது, அதை அப்படியே ஏற்றுக் கொண்டு இயற்கை எய்துகின்றன.

அதனால், அவைகள் சாகும்வரை சந்தோஷமாகத்தான் இருக்கின்றன. மற்ற தேவைகள் எதுவும் அவைகளுக்கு கிடையாது.

எனவே, மனிதன் இந்த விலங்குகளைப் பார்த்து கற்றுக் கொள்ள வேண்டிய விசயங்கள் ஏராளமாக இருக்கின்றன.

அந்த வகையிலே மனிதன் மேற்கொள்கின்ற அத்தனை யோகாசனப் பயிற்சிகளும், மிருகங்களின் ஒவ்வொரு உடல் அசைவுகள்தான் என்பதையும் அறிந்துக் கொள்ளாமல், ஏற்றி வைத்துக் கொண்ட ஏகப்பட்ட அறிவின் அடிப்படையில் ஆரோக்கியமாக வாழ வேண்டும் என்ற ஆசையினாலே, ஐந்தறிவு கொண்ட மிருகங்களின் ஒவ்வொரு உடல் அசைவுகளையும், ஆறறிவு படைத்த மனிதன் ஒவ்வொரு உடற்பயிற்சியாக பணத்தைக் கொடுத்து பயின்று வருவதுதான், **அறியாமையின் உச்சம்** எனலாம்.

எப்படியோ, அந்த வகையிலாவது மிருகங்கள் போன்ற உடல் அசைவுகளை நாம் இயற்கையாக உண்டாக்கும் பொழுது, நமக்கு உடலில் நோய் எதிர்ப்பு சக்தி கூடுகின்றது. அதனால், மருந்து, மாத்திரைகள் இல்லாமல் ஆரோக்கியமாக வாழ முடியும் என்ற புதிய புத்தி வந்திருப்பது, அவனது உடலுக்கு மட்டுமல்ல, அவனது அறிவுக்கும் ஆரோக்கியம் என்பதை நன்கு அறிய முடிகின்றது.

இதே மனிதர்கள் வீட்டில் செல்லப் பிராணிகளாக வளர்த்து வருகின்ற மிருகங்களின் நிலையை சற்று எண்ணிப் பாருங்கள். அவன் அவைகளைக் கூட நிம்மதியாகச் சாக விடுவதில்லை.

இப்பொழுது இருந்தே அனேக தடுப்பூசி மருந்துகள், கருத்தடை மாத்திரைகள், அவைகளை இயற்கையாக இன்பத்தை அனுபவிக்க விடாமல், செயற்கை முறை கருத்தறிப்பு முறைகள் எனக் கொஞ்சம் கூட ஈவு இரக்கமின்றி, அவைகளைக் கூட நிம்மதியாக வாழ விடாமல், இவனது சுய நலத்திற்காக, இயற்கைக்கு எதிரான இதுப்போன்ற அராஜக செயல்களைச் செய்துக் கொண்டு, தன்னை அறிவாளியாகக் காட்டிக் கொள்கின்றான்.

ஆனால், அதுவே காட்டில் வாழுகின்ற ஐந்தறிவு கொண்ட எந்த மிருகங்களும் மருத்துவமனைகளுக்குப் போவதையும், செயற்கை முறைக் கருத்தறிப்புக்கும் காரணமாவதை காண முடியுமா?

ஏன்?

அவைகளுக்கு அது அவசியமே இல்லை. காரணம் அவைகளுக்கு **மரணபயம்** கிடையாது.

ஆனால், மரணத்தைக் கண்டு பயப்படுகின்ற இதே மனிதன் தனக்கு மிகப்பெரிய **மரணக் குழியை** *ஏற்றி வைத்துக் கொண்ட அறிவினாலே* தானே அமைத்துக் கொள்கின்றான்.

எப்படி?

இன்றைய இளைய தாய்மார்களுக்கு இயற்கையான முறையில் இயல்பாக குழந்தைகளை பெற்றுக் கொள்ள முடியாமல், அவர்கள் அனேக மருந்துகளை கருத்தறித்த ஆரம்பத்தில் இருந்தே கொடுக்கப்பட்டு, அவர்களின் இயற்கை முறை பிரசவத்திற்குப் பதிலாக, செயற்கை முறை குழந்தை பெறும் ஆபரேஷன் அறிமுகப்படுத்தப்பட்டு பரவலாக இருக்கும் இந்தச் சூழ்நிலையில் மேலும், அவர்கள் இயற்கை முறையில் தாய்ப்பால் கொடுப்பதை தவிர்ப்பதற்காக, குழந்தைகளுக்கு தாய்ப்பால் கொடுப்பதினால், மார்பகம் இறங்கிவிடும் என்றும், இதனால் தங்கள் இளமை குன்றும் என்றும், அழகு பறிபோகும் என்றும் பலவாராக பல புதிய அறிவுகளை இவர்கள் மனதிலே ஏற்றி வைத்து விட்டு, இதற்கு மாற்றாக பசுவின் பாலை குழந்தைகளுக்கு கொடுக்கச் சொல்லி அறிவுறுத்தப்படுகின்றது.

சரி! இதில் என்ன வந்துவிடப்போகின்றது?

தாய்க்கும் இளமை குன்றாது! குழந்தைக்கும் பசுவின் பால் நல்லதுதானே என்று கேட்டீர்களேயானால், இங்கு நம்மிடையே ஏற்றி வைத்துக் கொண்ட அறிவின் அடிப்படையில், அனைவருக்கும் அவசியமான பசுவின் பால் எப்படி உற்பத்தியாகின்றது? என்ற உண்மையை அறியாமல் இதைச் சரி என்று ஆமோதிக்கின்றோம்.

ஆனால், உண்மை அப்படி அல்ல!

அதாவது, முதலில் எந்த ஒரு பசுவையும் இயற்கை முறையில் இனப்பெருக்கம் செய்ய அனுமதிப்பது கிடையாது. காரணம், பல பசுக்களை வைத்துக் கொண்டு பணம் பார்க்கும்

பசு பண்ணைகள் வைத்திருப்பவர்களுக்கு அது நடைமுறைச் சிக்கல் என்பதினால், அவர்கள் நவீன கல்வி முறையில் கற்று வந்த மாட்டு வைத்தியர்கள் பரிந்துரைக்கின்ற கருத்தறிக்கும் ஊசியின் வாயிலாக மட்டுமே தாய் பசு தனது கன்றுகளை ஈனுமாறு கட்டாயப் படுத்தப்படுகின்றது.

அதிலே, அவைகளுக்கு உணர்வுப்பூர்வமான அந்த சுகம் கிடைக்காமல் போகின்றது. இதனால், அவைகளும் ஏகப்பட்ட மன அழுத்தத்திற்கு தள்ளப்பட்டு, பல்வேறு புதிய நோய்களை தங்கள் உடலிலே சந்திக்கின்றது.

இத்தகைய நோய்களுக்கு இன்றைய நவீன மிருக வைத்தியம் அளிக்கப்படுகின்ற பல்வேறு மருந்துகள் தாய் பசுவின் இரத்தத்தில் கலந்து, அந்த பாலிலும் விஷமாக கலந்து விடுகின்றது.

இந்தப் பாலையே நாம் குழந்தைகளுக்கு குடிக்கக் கொடுக்கின்றோம். இத்துடன் இன்னும் சிலர் பணம் அதிகம் சம்பாதிக்கும் நோக்கத்தில், வியாபார புத்தியில் பால் பண்ணைகளில் பசு மாடுகளுக்கு ஹார்மோன் ஊசிகளை செலுத்தி, அதிகம் பால் சுரக்க வைக்கின்றனர்.

இந்த ஹார்மோன் ஊசியின் மருந்துகள் பசுவின் இரத்தத்தில் கலந்து, பாலிலும் வெளிப்படும் பொழுது, இந்தப் **பாலைப் பாசத்துடன் தருகின்ற தாய் தன் குழந்தையின் பிஞ்சு உடலிலே நஞ்சை விதைக்கின்றாள்.**

அந்த வகையிலே, அந்தப் பாலை குடித்து வளர்ந்து வருகின்ற பெண் குழந்தைகள் அந்த மாட்டிற்கு போட்ட

ஹார்மோன் ஊசியினால், தங்கள் உடலின் பல சுரப்பிகளில் ஹார்மோன்கள் அதிகமாகச் சுரந்து, சிறு வயதிலேயே சீக்கிரமாகவே பருவத்திற்கு (பூப்பு எய்துகின்றாள்) வந்து விடுகின்றார்கள். அந்த அறியாத சின்னஞ்சிறு வயதிலேயே பெண் குழந்தைகள் மாதவிடாய் தொந்தரவுகளை சந்தித்து, அவர்களும் மன ரீதியாக பாதிக்கப்படுகின்றார்கள்.

அதிலே, பள்ளிக்கு படிக்கச் செல்கின்ற பெண் குழந்தைகளின் நிலைமையை நன்கு அறிந்துக் கொண்ட இன்றைய நவீன விஞ்ஞானம் அதற்கான மாதவிடாய் துணிப் பேடுகளை பெரிய அளவிலே தயார் செய்து, பெண்ணிற்கு வருகின்ற இயற்கையான அந்த இரத்தப் போக்கினை, செயற்கையான முறையில் வெளியே கசியாமல் உறைய வைக்கின்ற உன்னதமான மருந்தினை அந்த துணியில் தடவி கொடுப்பதினாலேயே, அனேக பெண்கள் குழந்தைப் பெறும் பேற்றை இழந்து, உயர்வான தாய்மைத் தன்மையை, அதாவது, பெண்களுக்கே உண்டான உன்னதமான **“தாய்”** என்ற உணர்வை உணர முடியாமல் தடை செய்யப்படுகின்றார்கள்.

இத்துடன் இவர்களது இந்த இளமைப் பருவம் விரைவாக கழிந்து, இந்த விசயம் அறியாத விபரீத மருந்துகளின் வாயிலாக பெரும்பாலான ஆண்களும், பெண்களும் தங்களுக்கு வாரிசுகளை உண்டாக்கும் குழந்தைப் பெறும் சக்தியை இழந்து, இவர்களில் இந்த குழந்தைகள் இல்லாத மனப் போராட்டத்தை தனக்கு சாதகமாக்கிக் கொண்ட மேலும், சில நயவஞ்சகர்கள் அதற்கான செயற்கை முறை கருத்தறித்தல் முறையைக் கண்டு பிடித்து, எப்படி பசு மாட்டை செயற்கை முறையில் கருத்தறிக்கச் செய்கின்றனரோ

அதே செப்படி வித்தையை மனிதர்களிடமும் காட்டி, அவர்களிடம் குழந்தைகள் உண்டாக்கும் மருத்துவம் என்று பல புதிய மருந்துகளை பணம் பண்ணுகின்றார்கள்.

இன்றைய நவீன கல்வி முறைக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கின்ற கல்வி முறை இதுதான்.

இந்த அவல நிலைக்கு தள்ளப்படுவதும், தள்ளிக் கொண்டிருப்பதும் இதே ஆறறிவு படைத்த பகுத்தறிவு கொண்ட மனிதன் மட்டும்தான் என்பதை நன்கு பகுத்து அறிந்துக் கொள்ள அனைவரும் முயற்சியுங்கள்.

ஒரு நாளும் தன் சொந்த இனத்தை இப்படி ஐந்தறிவு படைத்த மிருகங்கள் அழிக்கவே அழிக்காது.

யோசித்துப் பாருங்கள்!

மனிதனுக்கு இதுப்போன்ற பல்வேறு நோய்களை உண்டாக்குகின்ற இந்த மருந்துகளின் விற்பனை நோக்கமே மனிதனுக்கு மரண பயத்தை உண்டாக்கி, மருத்துவமனைகளின் வாயிலாக பணம் பறிக்கின்ற நோக்கம் என்பதை என்று மனிதன் அறிந்துக் கொள்கின்றானோ, அன்றுதான் அவன் ஆறாவது அறிவைப் பெற்ற மனிதன் என்று போற்றப்பட வேண்டும்.

மற்றபடி இவைகளை அறியாமல், மிருகங்களைப் போன்றே வாழ்க்கையை மனம் போன போக்கில் வாழ விரும்புகின்றவனை மனித உருவத்தில் இருக்கும் மிருகம் என்றே கருத வேண்டும்.

மனிதனின் மரண பயமே அவனுக்கு மேலும், மேலும் மரணத்திற்கு இட்டுச் செல்கின்றது என்பதை நன்கு அறிந்துக் கொள்ள வேண்டும்.

ஏனெனில், **‘மனம் போல் வாழ்வு’** அல்லது **‘எண்ணம் போல் வாழ்வு’** என்று அன்றைய அறிஞர்கள் கூற்று இன்று மெய்யாக மாறுகின்றதை அறிந்துக் கொள்ள வேண்டும்.

மனதினால் மரணத்தைப் பற்றிய சிந்தனை மனிதனை மரணத்திற்கே எளிதாக அழைத்துச் செல்கின்றது என்பதை யாராலும் மறுக்க முடியாது.

நன்றாக யோசித்துப் பாருங்கள்!

அப்படி, மருத்துவத்தின் வாயிலாக நோய்கள் விரைவாக குணமடையும் என்றால், இராசயண மருந்து, மாத்திரைகளின் வாயிலாக நோய்கள் முற்றிலும் குணமடையும் என்றால், இன்று என்ன நடந்திருக்க வேண்டும்?

உண்மையில் மருத்துவமனைகளும், நோய்களும் குறைந்திருக்க வேண்டும்!

என்ன நடக்கின்றது?

குணமானவர்கள் யாருமே மருத்துவமனைக்கு வரக் கூடாது. அப்படி அவர்கள் வராத பொழுது, மருத்துவ மனைகளும், மருந்துக் கடைகளும் பெருகுவதற்குப் பதிலாகக் குறைந்து இருக்க வேண்டும்.

என்ன சரிதானே! அதில் ஒன்றும் சந்தேகம் இல்லையே!

ஆனால், நிலைமை அப்படியா இருக்கின்றது?

இன்னும் புதிய புதிய மருத்துவமனைகள் மேலும், மேலும் திறக்கப்படுகின்றன. பல புதிய, புதிய நோய்கள் உண்டாகி வந்துக் கொண்டே இருக்கின்றன.

இதனால், இன்னும் புதிய, புதிய மருந்துகள் விற்பனைக்கு கொண்டு வரப்படுகின்றன.

இத்தகைய மருந்துகளை உட்கொள்வதினாலேயே புதிய மருந்து கடைகளைப் பல்வேறு ஊர்களில் பல கிளைகளாக திறப்பதற்கும், பல புதிய மருத்துவமனைகள் அதிகரிப்பதற்கும் காரணமாக இருக்கின்றது என்ற உண்மை எத்தனைப் பேருக்குத் தெரியும்?

நன்கு யோசித்துப் பாருங்கள்.

ஆறறிவு படைத்த மனிதன் என்று கூறுவதற்கே அவமானமாக இருக்கின்றது.

**இதுவா பகுத்தறிவு?**

இந்த அறிவை வைத்தா, மனிதனை மகத்தானவன் என்று அழைக்க முடியும்?

மகத்துவம் என்பது உயர்ந்த ஒன்றிற்கு அல்லவா இருக்க வேண்டும்?

அதனால்தான் அந்த மகத்துவம் என்ற வார்த்தையை மருத்துவத்திற்கு வைத்துள்ளனர் நம் முன்னோர்கள்.

காரணம் மருத்துவம் என்பது முற்றிலும் **சேவை மனப்பான்மையில்** செய்யப்பட வேண்டிய ஒன்று.

ஆனால், இன்றைய மருத்துவம், கல்வியும் சேவை முறையிலா செய்யப்படுகின்றது?

பணம் பறிக்கின்ற மாபியா கும்பலைப் போன்றல்லவா இருக்கின்றது?

மருத்துவமனைகளும், கல்வியும் மக்களுக்கு ஏன் இலவசமாக கொடுக்கக்கூடாது?

அப்படிக் கொடுத்தால், மருத்துவமனைகளிலும், கல்வி நிறுவனங்களிலும் பல கோடிகளில் பணத்தைப் போட்டு பங்குதாரர்களாக மாறி இருக்கும் இவர்களின் வருமானம் என்னாவது?

அதனால், மக்களுக்கு இலவச வேஷ்டி, சேலை, இலவச அரிசி, பருப்பு, இலவச டி.வி, இலவச மிக்ஸி, கிரைண்டர் போன்றவைகளைக் கொடுத்துவிட்டால், அதன் வாயிலாக மக்கள் வாயடைத்துக் கொள்வார்கள் அல்லவா?

மேலும், மருந்து, மாத்திரைகளுக்கும், மருத்துவ மனைகளுக்கும் மக்கள் வர வேண்டும் என்றால், இதுப்போன்ற டி.வி, மிக்ஸி, கிரைண்டர் பொருட்களை இலவசமாகக் கொடுத்தால்தான் இவர்கள் உழைக்காமல் உடலை வைத்திருந்து, பல நோய்களுக்கு ஆளாகி, மரண பயத்தினால் பணத்தை மருத்துவத்திற்கு வாரி இறைப்பார்கள் என்பதுப் போன்ற நல்ல எண்ணம்.

யோசித்துப் பாருங்கள்!

உயர்ந்த அறிவு படைத்த மனிதனால் மட்டும்தான் இந்த தாழ்ந்த காரியத்தைச் செய்ய முடிகின்றது.

அறிவு குறைவான மிருகங்கள்கூட எந்தவித காழ்ப்புணர்ச்சியும் இன்றி, எந்தவிதமான எதிர்காலத் திட்டமும் இன்றி இன்பமாக அன்றைய வாழ்க்கையை ஆனந்தமாக வாழ்கின்றன.

அதிலே, அவைகளுக்கு உணவு மட்டும் கிடைத்தாலே மிகப்பெரிய ஆனந்தத்தை அடைந்து விடுகின்றது. அதுவும் பசியாறி விட்டாலோ, மற்ற எந்த உயிருக்கும் அவைகள் தீங்கு செய்வதுக்கூட கிடையாது.

ஆனால், மனிதன் அப்படியா இருக்கின்றான்?

காலங்களை இவனே வகுத்துக் கொண்டு, இறந்த காலத்தை நினைத்து கவலைப்பட்டுக் கொண்டிருக்கின்றான். எதிர்காலத்தை நினைத்து பயந்துக் கொண்டிருக்கின்றான். அதுவே, நிகழ்காலத்தின் வாழ்வதற்கு விரும்ப மாட்டேன் என்கிறான்.

இன்றைய வாழ்க்கையை எப்படி சந்தோஷமாக வாழ்வது என்பதை, தனக்கு கொடுத்த புத்தி சக்தியினால் அறிய முடியாத அளவிற்கு, அவனது எதிர்கால திட்டம் அறிவை மறைக்கின்றது.

இதுவா பகுத்தறிவு?

எதிர்காலத்திற்கு என்று திட்டம் போட்டு எத்தனையோ பல காரியங்களைச் செய்கின்றான்.

அது யாருக்கு?

இவனது பேரன், பேத்திகள் வாழ்வதற்காகவா?

அப்படியானால், இன்றைய வாழ்க்கையை ஆனந்தமாக அனுபவிக்காமல் இவன் செய்கின்ற அத்தனை காரியங்களினாலும், இவனது எதிர்கால சந்ததிகள் எந்த விதத்தில் சந்தோஷத்தை அனுபவிக்கும்?

இன்று இவன் இன்பம் என்று அனுபவித்துக் கொண்டிருக்கின்ற அத்தனை தொலைத் தொடபுக் கருவிகளும் எதிர்காலத்தில் இவன் வார்சுகளுக்கு, வாரிசுகள் இல்லாமல் செய்யப்போகின்றன என்பதை அறியாமல், ஆனந்தமாக இவன் அனுபவிக்கின்றான்.

இவன் சேமித்து வைத்த சொத்துக்கள் எல்லாம் இவன் வாரிகளுக்கு வாரிசுகள் இல்லாமல் போன பின்பு அவைகளை யார் அனுபவிப்பார்கள்?

இதை இவன் யோசித்துப் பார்பதே கிடையாது.

கொடுக்கப்பட்ட மனித அறிவு பயன் இல்லாமல் போனது.

இவன் உண்டாக்கி வைத்த பற்பல உபயோகமற்ற காரியங்களினாலேயே இவன் எதிர்காலச் சந்ததிகள் அழிவை நோக்கி அல்லவா நகர்ந்துக் கொண்டு இருக்கின்றது.

அது ஏன் இவனுக்கு தெரியமாட்டேன் என்கின்றது?

காரணம், இவன் ஏற்றி வைத்துக் கொண்ட அறிவு, இவனைப் பொருத்தவரைச் சரி என்பதாக இருக்கின்றது. அதனால், இவன் செய்கின்ற செயல்கள் அனைத்துமே இவனுக்கு மட்டும் சரியாக இருப்பதாகத் தோன்றுகின்றது.

இவன் பிறக்கும் பொழுது வெறும் கையுடன்தான் பிறந்தான். வந்த பொழுது எதையும் இந்த உலகிற்கு இவன் கொண்டு வரவில்லை. இடையில் இவன் அனுபவித்த அத்தனை விசய சுகங்களையும் இவன் போகும் பொழுது கையுடன் கொண்டு செல்லப் போவதில்லை. அதே வெற்றுக் கையுடன்தான் போகப் போகின்றான்.

பிறகு ஏன்? இத்தனை ஆசைகள்?

யாருக்கு சேமிக்கின்றான்?

யாருக்கு கொடுக்கப் போகின்றான்?

அவைகளைக் கொண்டு யார்தான் நன்றாக வாழ முடியும்?

இவன் உண்டாக்கிக் கொண்ட அத்தனை புதிய நோய்களையும், தங்கள் எதிர்கால வாரிசுகளுக்கு சொத்து பிரித்துக் கொடுப்பதுப் போன்று, பிரித்துக் கொடுத்து விட்டுச் செல்கின்றான்.

எப்படி என்று கேட்கின்றீர்களா?

இன்றைய இளைய சமூகம் தங்களது தவறான உணவுப் பழக்க வழக்கங்கள், போதைப் பழக்கங்கள் மற்றும் தவறான புரிதல்கள் என அனைத்தையுமே, தங்களுக்கு பிறக்கின்ற வாரிசுகளான குழந்தைகளுக்கு நிச்சயம் சொத்து பிரித்துக் கொடுப்பதுப் போன்று கொடுத்து விட்டுத்தான் செல்கின்றன.

இவனது தவறான பழக்க வழக்கங்களினால் இவனது இளம் வயதில் உண்டான, அப்பொழுது அறிய முடியாத அந்த நோய்களின் தாக்கத்தை, இன்று இவன் பெற்றெடுக்கின்ற குழந்தைகளுக்கு இவனே பரப்புகின்றான். அதனால்தான் பல்வேறு குழந்தைகளும் பிறக்கும் பொழுதே நோயாளிகளாகப் பிறக்கின்றன.

யோசித்துப் பாருங்கள்!

நாம் **ஒரு மரத்தை** வைக்க ஆசைப்படுகின்றோம்.

உடனே, அதற்கான தாய் மரத்தின் விதை நன்கு இருக்க வேண்டும் என்று, நன்கு விளைச்சலைக் கொடுக்கக் கூடிய ஒரு மரத்தில் இருந்துதான் விதையை எடுப்போமே தவிர, ஓர் நோய் தாக்கப்பட்ட விளைச்சல் சரியில்லாத மரத்தில் இருந்து விதைகளைத் தேர்ந்து எடுத்து நடமாட்டோம்.

சில வருடங்கள் பலன் கொடுக்கும் மரத்திற்கு இந்த அளவிற்கு யோசிக்கும் மனிதன், பல வருடங்கள் பலன் கொடுக்கும் தன் வாரிசை சரியாகக் கொடுக்க வேண்டும் என்று ஏன் யோசிக்க மறுக்கின்றான்?

தன்னுடைய வித்தை (விந்தை) தரமானதாக மாற்றிக் கொள்ள ஏன் மறுக்கின்றான்?

இவனது விந்து வீரியமாக இருக்க வேண்டுமானால், இவனது உணவுப் பழக்கம், உறக்கம், மனம், புத்தி, பண்பு நலன்கள் என அனைத்தும் சரியாக இருக்க வேண்டும்.

அத்தகைய தகப்பன் வெளிவிடுகின்ற விந்துவில் விதைக்கப்படுகின்ற குழந்தைத்தான் நல்ல ஆரோக்கியமான புத்திசாலியான குழந்தையாகப் பிறக்க முடியும்.

அதுவே, போதை வஸ்துக்களுக்கு அடிமையான, தவறான உணவுப் பழக்கங்களுக்கு அடிமையான, புலன் இன்பங்களுக்கு அடிமையான தகப்பனிடம் இருந்து வெளியிடும் விந்தின் வீரியம் ஒன்றிற்கும் உதவாத உதவாக்கரை குழந்தைத்தான் பிறக்க வழி வகுக்கும்.

ஆனால், இன்றைய இளைய தலைமுறை காதலர்களோ, தான் காதலிக்கும் ஆண் மகனுக்கு அனைத்து கெட்டப் பழக்கமும் இருக்க வேண்டும், அப்படி இருந்தால்தான் அவன் ஆண்மகன் என்று தவறாக தங்கள் அறிவில் ஏற்றி வைத்துக் கொண்டு, அதற்கு **‘கெத்து’** என்று பெயர் சூட்டிக் கொண்டு சீரழிகின்றார்கள்.

அதற்குப் பிறகு திருமணமான சில நாட்களிலேயே அந்த **‘கெத்து’** இவர்களது **‘விவாகரத்து’** என்ற புதிய பெயரிலே வெளிப்படுகின்றது.

அதனால், இன்றைய நீதிமன்றங்களிலே எத்தனை திருமண முறிவு வழக்குகள் நிழுவையில் உள்ளன?

யோசித்துப் பாருங்கள்!

நாம் எங்கே போய்க்கொண்டிருக்கின்றோம்?

மனிதனின் சுயநலம் மட்டுமே இதற்குக் காரணம். இவன் ஏற்றி வைத்துக் கொண்ட ஏகப்பட்ட புதிய கல்வி அறிவு இவனை இப்படிக் கலங்கப்படுத்தி வைத்திருக்கின்றது.

ஆகவே, கற்பதினால் மட்டும் அறிவு வந்து விடாது, எதைக் கற்கின்றோம், எப்படிக் கற்கின்றோம், கற்றதினால் என்ன பயன்? என்பதை அறியும் பொழுதுதான் உண்மையான அறிவு உண்டாகும்.

இன்றைய கல்வி முறையில் என்ன கற்றுக் கொடுக்கப்படுகின்றன என்பதை என்றாவது நாம் அறிந்துக் கொள்ளத் தயாரக இருக்கின்றோமா?

இல்லை.

ஏன்?

நாம் கற்கும் பொழுதே, சரியாக எதையும் கற்க விரும்பவில்லை. இதிலே, இன்றைய குழந்தைகள் கற்பதைப் பற்றி நாம் அறிந்து என்ன செய்யப் போகின்றோம்?

நமக்கு அந்தக் காலத்திலேயே சரியாக படிப்பு வராது! இதில், இன்றையக் காலத்து படிப்பை நாம் அறிந்து என்ன செய்யப் போகின்றோம் என்ற அக்கரையின்மைதான் இன்றைய

இளைய சமுதாயம் சீர்கெட்ட செயல்களில் ஈடுபடுவதற்குக் காரணம்.

இதற்கு, மற்றவர்களை நாம் குறைக் கூற முடியாது. தீதும், நன்றும் பிறர் கொடுப்பதில்லை. நாமே நமக்கு உருவாக்கிக் கொள்கின்றோம்?

எந்த முறையில்?

இதுப்போன்ற சமூக அக்கரையின்றி, இன்று நாம் மட்டும் நன்றாக வாழ்ந்தால் போதும், நமக்கு மட்டும் பணம் நிறைய கிடைக்க வேண்டும். நம் மகன் மட்டும் மருத்துவன் ஆனால் போதும், அப்பொழுதுதான் நான் மட்டும் பெரும் பணக்காரர்களின் வரிசையில் வரமுடியும் என்ற பேராசைதான் காரணம்.

இதனால், நம்முடைய எதிர்கால வாரிசுள் நம் கண்ணெதிரே கெட்டு அழிவதைப் பார்க்கின்ற பொழுதுதான், அந்த அக்கரையின்மையின் ஆழம் புரிய வருகின்றது.

இந்த அனுபவத்தை இனி வருகின்ற எதிர்கால பெற்றோர்கள் எதிர்கொள்ளக் கூடாது என்றால், இன்று நிகழ் காலத்தில் நம்மை நாமே சரியாக்கிக் கொள்ள வேண்டும்.

அது ஒன்றே அனைவருக்கும் அருமையான தீர்வு.

தன்னைத் தான் மாற்றிக் கொள்ளாமல், இந்த மக்கள் சமுதாயத்தை மாற்ற முயற்சிக்கின்றேன் என்பதுப் போன்ற மூடத்தனம் வேறு ஒன்றும் இருக்க முடியாது.

எனவே, பிறந்தவர்கள் எல்லாம் ஒரு நாள் இறந்துதான் ஆக வேண்டும். எத்தனை மருத்துவமனைகள், மருந்து மாத்திரைகள் என்று வந்தாலும், யாரும் உயிருடன் இருக்க முடியாது.

உடல் அழிவிற்கு உட்படுகின்ற பொழுது, அந்த மரணத்தை நிச்சயம் தவிர்க்க முடியாது. இந்த உண்மையை நன்கு உள்வாங்கிக் கொண்டு, மரணம் வருவது உடல் அழிவினால்தான் என்பதை நன்கு உள் வாங்கிக் கொண்டு, இந்த உடம்பை எப்படி பராமரித்துக் கொள்வது? என்பதை, தனக்கு கொடுக்கப்பட்ட புத்தி சக்தியினால் நன்கு ஆராய்ந்து பார்த்தீர்களேயானால், உங்களுக்கு ஒரு உண்மை விளங்கும்.

அது என்ன? என்று கேட்டீகளேயானால், இந்த உடல் நோய் இன்றி இருக்க, இந்த உடல் பிறப்பதற்கு முன்பு இருந்த நம்முடைய உண்மை நிலையை, நாம் சற்று ஆராயுமிடத்து, நமக்குத் தேவையான இந்த உடல் கிடைக்க காரணமாக ஒன்று இருந்திருக்கின்றது என்பது புரிய வரும்.

அதுதான் நமது மனம் என்று அறிந்துக் கொள்ளுங்கள்.

அந்த மனம் எப்படியெல்லாம் தன் ஆசைகளை அனுபவிக்க விரும்புகின்றதோ, அதற்கேற்றவாறு உடலையும், உலகத்தையும் படைத்துக் கொள்கின்றது என்பதை தன்னுடைய மனதினாலேயே தன்னை பற்றி, நன்கு விசாரணை மேற் கொண்டு அறிந்துக் கொள்ள முயறசியுங்கள்.

அப்படிப்பட்ட விசாரணையின் முடிவில், நான் இந்த மனமோ, புத்தியோ, மற்றும் இந்த உடலோ அல்ல.

அவைகளுக்கு அப்பாற்பட்ட என்றும் இருக்கின்ற பிறப்பு, இறப்பற்ற **“ஆன்மா”** என்பதை இந்த பிரத்யேக மனித உடலிலே கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவின் வாயிலாக அறிந்துக் கொண்டு, அந்த ஆன்ம நிலையிலேயே நிலைப் பெற்று நின்று வாழ்ந்தோமேயானால், மற்ற எல்லா உடல்களிலும் நான்தான் இருக்கின்றேன் என்ற மிகப்பெரிய உண்மை விளங்க ஆரம்பிக்கும்.

இது விளங்கியவுடன், இந்த உயிர்களும், உலகமும் என் எண்ணங்களாகவே என்னுடைய மனதில் ஏற்றி வைக்கப்பட்டு, அது மேலும் பல எண்ணங்களாக வெளிப்பட்டுள்ளது என்பதை அறியும் பொழுது, நம்மை நாம் முழுமையாக அறிகின்றோம். அப்பொழுது, நாம் அடைகின்ற ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை.

இது மட்டும்தான் நம் உண்மை சொரூபம்.

எப்படி நாம் கனவு காணும் பொழுது, இந்த உலகத்தில் இல்லாமல், வேறு ஒரு உலகத்தைப் படைத்துக் கொள்கின்றோம். அந்தக் கனவு கலைந்ததும், விழிப்பு நிலையில் இந்த புற உலகத்திற்கு வந்து, அந்தக் கனவைக் **கற்பனை** என்று அறிகின்றோம்.

அப்படிக் கனவு உலகத்தைப் படைக்கின்ற *நான் வேறு,* இந்த நினைவு உலகத்தில் இருக்கின்ற *நான் வேறு* அல்லவா?

அதாவது, இரண்டு வேறு, வேறு மனங்களின் வெளிப்பாடுகள் அல்லவா? அந்த கனவு உடல்களும், கனவு உலகமும் மற்றும் இந்த நினைவு உடல்களும், இந்த நினைவு

உலகமும் மனதின் கற்பனை என்பதை எளிதாக அறிய முடிகின்றது அல்லவா?

அதாவது, இந்த விழிப்பு நிலை அனுபவமும் நமக்கு இல்லாமல் கற்பனையாகப் போகின்ற அடுத்த ஆழ்ந்த உறக்க நிலை அனுபவத்தினை நாம் அறிகின்ற பொழுது, நமக்கு அதன் உண்மைத்தன்மை இன்னும் சற்று எளிதாக விளங்க ஆரம்பிக்கும் அல்லவா?

அதாவது, அந்த ஆழ்ந்த உறக்க நிலையிலே, இந்த உலகமும் இல்லை. உறவுகளும் இல்லை. நாம் ஆணா, அல்லது பெண்ணா என்றுக்கூடத் தெரியாத அளவிற்கு அப்படிப்பட்ட ஒரு அமைதியான உறக்கம்.

அந்த அமைதி எங்கு இருக்கின்றது?

ஆழ்ந்த உறக்கத்திலா? அல்லது மீளாத்துயில் என்கின்ற மரணத்திலா?

அதாவது, இந்த உடலுடன் கூடிய ஆழ்ந்த உறக்கத்திலே, உடலையும் இந்த உலகத்தையும் உணராமல், **நான் யார்?** என்று அறிய முடியாத ஒரு ஆனந்த அமைதி நிலை அங்கு உண்டாகின்றது.

அதுப்போன்றே, இந்த உடலை உணராத மீளாத உறக்கமான மரணத்திலே **நான் யார்?** என்று அறிய முடியாத அவல நிலை உண்டாகப் போகின்றது.

அதற்கு முன்பாக இந்த விசாரணையை மேற்கொண்டு தன்னை அறிய முயற்சியுங்கள். அது கொடுக்கப்பட்ட இந்த பிரத்யேகமான மனித உடலில் மட்டுமே சாத்தியம்.

உண்மையில், நான் யார்?

அதை எப்பொழுது நான் அறிந்துக் கொள்ள முடியும்?

நான்!

இந்த உடலா?

ஆணா அல்லது பெண்ணா?

இந்தியனா? அல்லது இஸ்லாமியனா?

தமிழனா? அல்லது கன்னடனா?

எந்த ஒன்றும் அறிய முடியாத அந்த ஆழ்ந்த உறக்கத்திலும், மீளாத மரணத்திலும் எனக்கு நேர்கின்ற உண்மை நிலை என்ன?

**நான் யார்?**

ஒன்றுமே உணரமுடியாத அந்த அனுபவங்களில் **நான் யார்?**

அப்பொழுது நான் எங்கே இருந்தேன்?

என்றாவது, இதைப்பற்றி யோசித்துப் பார்த்து இருக்கின்றோமா?

ஆழ்ந்த உறக்கத்தைப் போன்றுதான் நம் இறப்பும் கூட.

எனவே, இந்த இறப்பு என்பது ஒரு ஆழ்ந்த அமைதி நிலை அனுபவத்திற்கு, அதாவது நம்முடைய உண்மைத் தன்மைக்கு அழைத்துச் செல்லும் ஒரு முன்னோட்ட நிகழ்வு.

அவ்வளவுதான்!

இந்த ஆழ்ந்த அமைதி நிலை இறப்பைத்தான் நாம் *ஆழ்ந்த உறக்கத்தில்* விழிப்பு நிலை உலகமும், உறவுகளும் இன்றி, கனவு நிலை உலகமும், உறவுகளும் இன்றி தினம், தினம் அனுபவிக்கின்றோம்.

ஆகவே, இந்த *ஆழ்ந்த உறக்கம்* என்பது நம்முடைய இறப்பிற்கு பின்பு நிகழ இருக்கின்ற ஆனந்த அமைதிக்கு ஒரு உதாரணம் என்பதை உணர்ந்துக் கொள்ளுங்கள்.

ஆனால், இந்த ஆழ்ந்த உறக்க நிலை அனுபவத்தையும் அறிகின்ற **'ஒரு அறிவு'** இருக்கின்றது. அது நமக்கு விழிப்பு நிலை அனுபவத்தில் **"நான்"** நன்றாகத் தூங்கினேன் என்று எடுத்துக் காட்டுகின்றதே, அதுதான் உண்மையில் இந்த அனைத்தையும் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கும் உண்மையான **"நான்".**

அந்த **"நானே"** என்றும் இருக்கின்ற, எல்லோரிடத்திலும் இருக்கின்ற, நாம் எளிமையாக அறிந்து வைத்துள்ள **'உயிர்'** எனலாம்.

இதனைத்தான் **ஆன்மா, ஆத்மா, இறைவன், அல்லா, சிவம், ஈஸ்வரன், சாட்சி, பிரம்மம்** என்று பலவாறாக பெயர் சூட்டி அழைக்கின்றோம்.

இவைகளும் கூட நம் அறிவில் ஏற்றி வைத்துக் கொண்ட புதிய, புதிய அறிவுகள் என்றே கூறலாம்.

உண்மையில் இந்த நாம, ரூபங்களுக்கு அப்பாற்பட்ட *'அறிவு சொரூபமே',* **"நான்"** என்பதை நன்கு அறியும் பொழுது, நமக்கு பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை.

என்றும், எப்பொழுதும் இருக்கின்றவன் **"நான்"** மட்டுமே என்பது புரிய வரும்.

அப்பொழுது மட்டும்தான் இறப்பைக் கண்டு பயப்பட மட்டோம்!

உண்மையில் இறப்பது **"நான்"** அல்ல!

இந்த **'உடல்தான்'** இறக்கின்றது.

வந்தது எதுவும் ஒரு நாள் அழிவுக்கு உட்பட்டே ஆக வேண்டும்.

அந்த வகையிலே, வந்த இந்த உடலும் ஒரு நாள் அழிவுக்கு உட்படும்.

ஆனால், என்றும், எப்பொழுதும் சாஸ்வதமாக **"நான்"** மட்டுமே, ஒன்றேயான அந்த ஆன்மாவாகவே இருந்துக் கொண்டிருக்கின்றேன் எனக்கு பிறப்பு, இறப்பு கிடையாது.

நான் பிறக்கவும் இல்லை. இறக்கப் போவதும் இல்லை.

இந்த பிறப்பு, இறப்பு எல்லாமே **இந்த மனதிற்கும், உடலுக்கும் தானே** தவிர எனக்கு அல்ல என்ற புரிதல் வரும்.

ஆகவே, அழியக்கூடிய இந்த உடல், அந்தக் காலம் வருகின்ற பொழுது நிச்சயம் அழிந்து விடும். அதைத் தடுக்கப் போகின்றேன் என்று நாம் எடுக்கும் அனைத்து முயற்சிகளுமே வீணான காரியமாகத்தான் இருக்க முடியும்.

எனவே, என்றும் இருக்கின்ற எனது இருப்புக்கு வேறாக எந்த ஒன்றுமே கிடையாது என்று அறிவதே **“அறிவு”** எனப்படுகின்றது.

இந்த அறிவு வந்துவிட்டால், தேவைகள் இருக்காது, சேமிப்பு இருக்காது, நான், எனது, என்னுடையது என்ற அஹங்கார, மமகாரம் இருக்காது.

இதை அறிந்துக் கொள்ள மட்டுமே மனிதனுக்கு பிரத்யேகமான் **ஆறாவது அறிவு** கொடுக்கப்பட்டுள்ளது என்பதை அறிந்து, அந்த அழியாத அறிவாகவே **“நான்”** மட்டுமே இருக்கின்றேன் என்பதை எவன் ஒருவன் அறிகின்றானோ, அவனே **“ஞானி”** எனப்படுகின்றான்.

ஞானிகளில் அனேக விதம் இருக்கின்றனர்.

அந்த வகையிலே இசையை அறிந்த ஞானி **‘இசைஞானி’** எனப்படுகின்றான். விஞ்ஞானத்தை அறிந்த ஞானி **‘விஞ்ஞானி’** என்று அழைக்கப்படுகின்றான்.

ஆனால், அந்த அறிவை அடைந்த ஞானிகள் இந்த உடலை விடும் பொழுது, அவர்களுடன் சேர்ந்து, அந்த அறிவும் மறைந்து விடுகின்றது.

காரணம், அவைகள் பொய் அறிவு.

ஆனால், தன்னை அறிந்த **'மெய்ஞானி'** இருக்கின்றானே, அவன் அடைந்த அறிவு, அவனது உண்மை அறிவாக, அதாவது, தன் உண்மை இயல்பான சொரூபமாகவே இருப்பதால், இந்த அறிவு, இந்த உடல் அழிந்தாலும், அழிக்க முடியாத அறிவு.

காரணம் அவன் அந்த அறிவாகவே இருப்பதினால், அதாவது, தன் உண்மை சொரூபத்தை அறிந்த **'மெய்ஞானி'** என்பதினால், அவனுக்கு அழிவு என்பதே கிடையாது.

இதை அறியும் அறிவே உண்மையில் **'அறிவு'** என்பதை அறிந்துக் கொள்ளுங்கள். மற்ற எதை அறிந்துக் கொண்டாலும், அவைகள் மனதினால், புத்தியாக ஏற்றி வைத்துக் கொண்ட சாதாரண அறிவுதான். அந்த அறிவு உடல் அழியும் பொழுது, அவைகளும் கூட சேர்ந்து தானும் அழிந்து போகும்.

அத்தகைய ஏற்றி வைத்துக் கொண்ட அறிவு, சித்தத்தில் ஆசைகளாக சேகரிக்கப்பட்டிருந்தால், அவைகளை அனுபவிக்க கண்ணிற்குத் தெரியாத இந்த சூக்ஷும மனம், மீண்டும் கண்ணிற்குத் தெரிகின்ற ஒரு ஸ்தூல உடல் எடுத்து, அந்த ஆசைகளை அனுபவிக்க முயற்சிக்கும்.

இதனால், மீண்டும் பிறப்பு, இறப்பு என்பது இந்த மனதிற்குத்தானே தவிர ஆன்மாவிற்கு கிடையாது.

ஆன்மா எப்பொழுதும் இருக்கின்ற **நித்ய வஸ்து**.

அதற்கு ஆக்கமும் இல்லை, அழிவும் இல்லை.

ஆக்கமும், அழிவும் இந்த மனதிற்கும், மனம் எடுத்த உடலுக்கும் என்பதை எவன் அறிகின்றானோ, அவனே **மனிதர்களில் மகத்தானவன்** எனப்படுகின்றான்.

ஆகவே, *நம் மனம் மாறினால், இந்த உலகம் மாறும்.*

நாம் மாறாமல், இந்த உலகத்தை மாற்ற முயற்சித்தோ மேயானால், நாம் எத்தனை யுகங்கள் இந்த பூ உலகில் இருந்துக் கொண்டு, சாகாமல் இருக்கலாம் என்று என்ன செய்தாலும், அதன் பயன் அனைத்தும் வீணான முயற்சிகள் என்பதை அறிந்துக் கொள்ளுங்கள்.

இது யாராலுமே முடியாது?

ஏன் யாராலுமே முடியாது? என்றால், நாம் ஏற்றி வைத்துக் கொண்ட, ஏகப்பட்ட விசய சுகங்களினால் ஆசைக் கொண்ட அற்ப மனம் மாறாமல், இந்த அரிதான மனித சமுதாயம் மாறாது.

இந்த மனித சமுதாயம் மாற, நாம் ஒவ்வொருவரும் நம் மனதை மட்டும் விசாரித்து அறிய வேண்டும்.

மனதை விசாரித்து அறிய வேண்டும் என்றால், இந்த மனம் எதில், எதில் எல்லாம் சிக்கிக் கொண்டிருக்கின்றது

என்பதை சற்று கவனித்து, அதில் இருந்து விடுபட முதலில் முயற்சியை மேற்கொள்ள வேண்டும்.

ஏற்றி வைத்துக்கொண்ட விசயங்கள் எப்படி நம்மை அலைக்கழிக்கின்றது?

எங்கு நாம் உண்மையிலேயே சிக்கிக் கொண்டிருக் கின்றோம்?

ஏன் நாம் இதுப்போன்ற ஏற்றி வைத்துக் கொண்ட விசயங்களை விடாப்பிடியாக பிடித்து வைத்துக் கொண்டு உள்ளோம்? என்று பல கோணங்களில், பலவாறாக இந்த புத்தி சக்தியைக் கொண்டு, யோசித்து அறியாமையை அகற்ற முயற்சிக்க வேண்டும்.

அதை விடுத்து, மற்றவர்களை நம் போக்கிற்கு மாற்றவோ, அல்லது நாம் அவர்கள் போக்கிற்கு மாறவோ செய்தோமானால் என்றுமே நமக்கு அமைதியும், ஆனந்தமும் உண்டாகாது.

அந்த அமைதியையும், ஆனந்தத்தையும் இந்த உடலுடன் வாழுகின்ற காலத்திலேயே அனுபவிப்பவன்தான், உண்மையிலேயே உயர்வான மனிதப் பிறவியின் மகத்துவம் அறிந்தவன்.

அத்தகைய மகத்தான மனிதனுக்கு மனம் சார்ந்த கல்வியைக் கற்றுக் கொடுக்க வேண்டும். அதற்கான பாடத் திட்டங்கள் கொண்டுவரப்பட வேண்டும். அதுவும் மனதின் உண்மைத் தன்மையை அறிந்த ஞானிகளின் உபதேசமாக

அவைகள் இருக்கப்பட வேண்டும். அப்படிப் பட்ட கல்வி இனி வரும் எதிர்கால சந்திகளுக்கு இலவசமாக அளிக்கப்படுமானால், இனி இந்த மனித சமுதாயம் மகத்தான சமுதாயமாக மாறிவிடும். இந்த மனித சமுதாய மக்கள் அனைவருமே அமைதியுடனும், ஆனந்தத்துடனும் இன்புற்று வாழ்வார்கள்.

அத்தகைய அமைதியும், ஆனந்தமும் நம்முள் வராமல், நம்மிடையே அன்பு உண்டாகாது. அந்த அன்பு உண்டாகாமல், சீவனை, சிவமாக அறிய முடியாது.

சிவத்தை அறியாததின் காரணமாக, அழிகின்ற சவத்தை (இந்த உடலை) **"நான்"** என்று நினைக்க வைக்கின்றது.

அத்தகைய முழுமையான சிவத்தை (ஆன்மாவை) அறிந்து, அமைதி வெளிப்பட்டு, ஆனந்தம் உண்டாக வேண்டுமானால், அதுவாகத்தான் **"நான்"** இருக்கின்றேன் என்ற **உண்மை உணர்வு** நம்மிடம் வெளிப்பட்டாக வேண்டும்.

அதற்கு நாம் அனைவருமே நம் மனதை விசாரித்து, விபரம் அறிந்த மற்ற மகத்தானவர்களிடம் சென்று, மேலும் சில உண்மைகளை அவர்களின் வாயிலாகக் கற்று, உணர்ந்து, அறிந்துக் கொள்ள வேண்டும்.

அந்த உள்ளுணர்வே உண்மையில் **"நான்"** என்று என்று அறிய முடிகின்றதோ, அன்றே அமைதியின் ஆனந்தம் முழுமையாக வெளிப்படும்.

**“நான்”** முழுமையானவன். **இந்த உலகம்** முழுமையானது.

முழுமையான என்னிடம் இருந்தே, இந்த உலகம் படைக்கப்பட்டுள்ளது.

**முழுமையிலிருந்து** (என்னிடத்திலிருந்து) **முழுமையை** (இந்த உலகத்தை) எடுத்த பின்பும், **முழுமையே** இறுதியில் எஞ்சி நிற்கும்.

ஆகவே, நானே முழுமையான ஆனந்தம், நானே முழுமையான அமைதியின் இருப்பிடம். இதை உணர்வதே முழுமையான மனிதப் பிறவியின் முக்கியம்.

நன்றி!

**ஓம் தத் சத்!**

